# கல்கி

KALKI 2.11.2003 ரூ.6.00



பெப்ஸி குடிப்பதுண்டா?
-அசினிடம் அதிரடி!

# அற்புத அன்னை

கல்கி
2.11.2003



ஆசனம் செய்கிறார் மதன்பாப்! 72-73

பெப்ஸி பிடிக்குமா? 12

# ஆஹா! ரூ.50,000 பரிசு!

திருச்சி வாசகர்களுக்காக மட்டுமே **கல்கி** வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி

ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது ரொம்ப ரொம்ப 'சிம்பிள்'!

கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும் 9 நவம்பர் இதழிலும் இதே போன்று குவிஸ் கூப்பன் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன்




ஆஹா! ரூ.50,000 பரிசு!

**திருச்சி குவிஸ் போட்டி கூப்பன் - 5**

1. ஸ்ரீரங்கம் கோபுரத் திருப்பணியில் ஈடுபாடு காட்டிய தமிழ்த் திரைப்பட இசையமைப்பாளர் ..........................................
2. டார்ஜிலிங் - இமயமலை ரெயில்வேக்காக நீராவி இஞ்சின் தற்போது திருச்சியில் .......................................... ரெயில்வே பணிமனையில் தயாராகிறது.
3. திருச்சிக்கு வடக்கே கொள்ளிடத்திலிருந்து 20 கி.மீ. தூரத்தில் யமனுக்கு ஆலயம் உள்ள ஊர் ..........................................
4. இங்கிலாந்தின் பிரதமராக இருந்த சர்ச்சில் .......................................... (ஊர்ப் பெயர்) தயாரிக்கப்பட்ட சுருட்டை விரும்பிப் புகைப்பாராம்.
5. பஞ்சமுக விநாயகருக்கு ஆலயம் திருச்சி உத்தமர் கோயிலருகே .......................................... கோயிலில் உள்ளது.
6. திருச்சியில் ஜனாதிபதி அப்துல் கலாம் படித்த கல்லூரியின் பெயர் .......................................... கலை அறிவியல் கல்லூரி.




எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய திருச்சி மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனமான அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, வழங்கும் ரூ.85/- மதிப்புள்ள 'சோ' எழுதிய 'எங்கே பிராமணன்?' புத்தகம் - 120 நபர்களுக்கு.




- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (திருச்சி)' என்று குறிப்பிட வேண்டும்.
- விடைகள் 20.11.2003க்கு முன்னதாக வந்து சேர வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி திருச்சி மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

ஒருநாள் மும்பையிலிருந்து நைரோபிக்குப் பறந்து கொண்டிருந்த விமானத்தில் பயணம் செய்து கொண்டிருந்தார், மும்பையைச் சேர்ந்த பிசினஸ்மேன் ராமாவதார் கோயங்கா. அந்த விமானப் பயணம், அவரது வாழ்க்கையில் மறக்கவே முடியாத பயணம். ஆம்! அவரது இருக்கைக்கு அடுத்து அமர்ந்து பயணம் செய்தவர் அன்னை தெரசாவேதான். சிகரெட் பிடிக்கும் பழக்கம் உடையவர் கோயங்கா. ஆனால், அன்னை பக்கத்தில் அமர்ந்திருக்கும்போது, சிகரெட் பிடிப்பதா? கூடாது என்று தடுத்தது அவரது மனசாட்சி. சிகரெட் பிடிக்க வேண்டும் என்று அவர் ஆவல் மேலிட்டபோதெல்லாம் அன்னையின் முகத்தைப் பார்த்தார். அன்றைய பயணம் முழுக்க அவர் சிகரெட்டைத் தொடவே இல்லை.

"அன்று விட்டதுதான், இன்றுவரை சிகரெட்டைத் தொடவில்லை. இனி என் வாழ்நாளில் அதைத் தொட மாட்டேன்" என்று கூறுகிறார் ராமாவதார் கோயங்கா.

அதற்கு முன்னால், பல தடவை 'சிகரெட்டுக்கு குட்பை சொல்லப் போகிறேன்' என்று சொல்லி நிறுத்தியது உண்டு. ஆனால், அவரால் சிகரெட்டை விட முடியவில்லை. அன்று அன்னை தெரசாவுடனான பயணம்தான் அவரை மாற்றியது. இது அன்னை தெரசா நிகழ்த்திய அற்புதம் என்று நாங்கள் மனப்பூர்வமாக நம்புகிறோம்'' என்கிறார் ராமாவதார் கோயங்காவின் மனைவி ஷீலா.

இது போல அனேகம் பேர்களின் வாழ்க்கையில் தமது ஆசியாலும், பிரார்த்தனையாலும் பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறார் அன்னை. ஆனால், இவற்றையெல்லாம் அற்புதங்களாகப் போப் ஆண்டவரால், கிறிஸ்தவ மரபுகளின்படி ஏற்றுக் கொள்ள இயலாது.

மே. வங்காளத்தைச் சேர்ந்தவர் மோனிகா பாஸ்ரா (வயது 35). இவருக்கு வயிற்றில் கட்டி. "மருத்துவர்களால் என்னைக் குணப்படுத்த முடியவில்லை; அன்னை தெரசாவை மனமுருகி பிரார்த்தனை செய்தேன். என் வயிற்றில் இருந்த கட்டி மாயமாக மறைந்து விட்டது. இது மருத்துவர்களுக்கே புரியாத புதிர். ஆனால், அன்னையை நான் பிரார்த்தனை செய்ய, அவர் நிகழ்த்திய அற்புதம்தான் இது என்று நான் தீவிரமாக நம்புகிறேன்" என்கிறார் மோனிகா.

நானூறு சதுர மீட்டர் பரப்பளவும், ஆயிரம்

ஜனத்தொகையும் கொண்ட வாடிகன் நகரில், கடந்த அக்டோபர் பத்தொன்பதாம் தேதி உலகமெங்கு மிருந்து திரண்டிருந்த ஐந்து லட்சம் பேரில், மோனிகா பாஸ்ராவும் ஒருவர்.

வாடிகனில் நடந்த கோலாகலமான நிகழ்ச்சியில் அன்னை தெரசாவுக்கு 'ஆசிர்வதிக்கப்பட்டவர்' (blessed) என்கிற கௌரவம் அளிக்கப்பட்டது. இத்தகைய கௌரவத்தை, எளிதில் போப் ஆண்டவர் வழங்கிவிட மாட்டார். இந்தச் சிறப்புக்கு பரிந்துரைக்கப்பட்டு, நூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகியும், அங்கீகரிக்கப்படாதவர்கள் நிறைய உண்டு.

அன்னைக்கு அளிக்கப்பட்ட இந்த கௌரவம் குறித்து, சென்னை சாந்தோமில் உள்ள ஆர்ச் பிஷப் இல்லத்தில் துணைப் பேராயர் லாரன்ஸ் பயஸ் அவர்களைச் சந்தித்துப் பேசினோம்.

"அன்னை தெரசாவுக்கு அளிக்கப்பட்டுள்ள 'ஆசிர்வதிக்கப்பட்டவர்' என்கிற தகுதியைப் பெற என்ன தகுதிகள் தேவை என்று கிருஸ்தவ மதத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது?"



● பேராயர் லாரன்ஸ் பயஸ்

"ஒருவருக்கு 'புனிதர்' பட்டம் வழங்குவதில் நான்கு கட்டங்கள் இருக்கின்றன. சேவை மனம், இறை நம்பிக்கை, தம்மை வெறுப்பவர்கள் மீதும் அன்பு காட்டுவது என்று பல்வேறு நற்பண்புகளின் அடிப்படையில், அந்தந்த பகுதியைச் சேர்ந்த பேராயர்கள், போப் ஆண்டவருக்குப் பரிந்துரை செய்வார்கள். அவற்றை வாடிகனில், ஒரு குழு பரிசீலனை செய்து, போப் ஆண்டவருக்கு சிபாரிசு செய்யும். அந்தச் சிபாரிசின் பேரில், முதல் கட்ட கௌரவம் வழங்கப்படும். இதற்கு இறைவனின் சேவகர் (சர்வண்ட் ஆப் காட்) என்று பெயர். வருடத்துக்குச் சராசரியாக உலகெங்குமிருந்து வரும் பரிந்துரைகளிலிருந்து, சுமார் பத்துப் பேருக்கு இந்த கௌரவம் வழங்கப்படுகிறது.

# ஓர் அன்னை புனிதராகிறார்!



இவர்களில், மேற்கூறிய பண்புகளில் இன்னும் சிறப்பானவர்களுக்கு அடுத்த கட்ட கௌரவத்துக்குத் தேர்வாகிறார்கள். இதற்கு 'வெனரேஷன்' என்று பெயர்.

அன்னை தெரசாவைப் பொறுத்தவரை இந்த முதலிரு கட்டங்களையும் தவிர்த்து நேரடியாகவே மூன்றாம் கட்ட கௌரவமான 'ஆசிர்வதிக்கப்பட்டவர்' என்ற கௌரவம் வழங்கப்பட்டிருக்கிறது.

குறிப்பிட்ட நபரைத் தெய்வமாக நினைத்து, பிரார்த்தித்து, அந்தப் பிரார்த்தனை பலித்து, ஓர் அற்புதம் நிகழும் பட்சத்தில்தான் 'ஆசிர்வதிக்கப்பட்டவர்' என்கிற கௌரவம் வழங்கப்படும்.

அன்னை தெரசா விஷயத்தில், மே. வங்காளத்தைச் சேர்ந்த மோனிகா பாஸ்ரா வாழ்க்கையில் அற்புதம் நிகழ்த்தியிருப்பதாக ஏற்றுக்





Turn to page 42 to find out!

கொள்ளப்பட்டு, 'ஆசிர்வதிக்கப்பட்டவர்' என்று அங்கீகரிக்கப்பட்டிருக்கிறார்.

***''மே. வங்க அரசு டாக்டர்கள் அது அற்புதமில்லை; மருத்துவச் சிகிச்சை தான் கட்டி குணமாகக் காரணம் என்று சர்ச்சை எழுப்பியுள்ளனரே?''***

''மோனிகா பாஸ்ராவின் வாக்கு மூலத்தின் அடிப்படையில் மட்டும், அன்னைக்கு இந்தக் கௌரவம் தரப்படவில்லை. வாடிகனிலிருந்து அனுப்பப்பட்ட ஒரு குழு, இது குறித்து விசாரணை செய்து, அவரது வாக்கை உண்மை என்று ஏற்றதன் அடிப்படையில்தான் கௌரவம் வழங்கப்பட்டுள்ளது.

***''அன்னை தெரசா, புனித தெரசாவாக எப்போது அங்கீகரிக்கப் படுவார்?''***

''ஆசிர்வதிக்கப்பட்டவர்' என்ற அங்கிகாரம் வழங்கப்பட்டபின், இன்னொரு அற்புதம் நிகழுமானால், அதை விசாரணை செய்து உண்மையா என்று கண்டறிந்து, தக்கபடி 'புனிதர்' கௌரவம் வழங்கப்படும்.

***''முதல் இரண்டு கட்டங்களிலிருந்து விதிவிலக்கு தரப்பட்டு, நேரடியாக மூன்றாவது நிலை கௌரவம் அன்னை தெரசாவுக்குத் தரப்பட்டது ஏன்?''***

''அன்னையின் தொண்டுள்ளமும், இறைநேசமும் உலகமே அறிந்த ஒன்று தானே! அவரது சேவையை, அங்கீகரித்து இந்திய அரசு பாரத ரத்னா விருது வழங்கி கௌரவித்துள்ளதே! உலகப் புகழ் பெற்ற நோபல் சமாதானப் பரிசு, அன்னைக்கு அவரது தன்னலமற்ற சேவைக்காகத்தானே வழங்கப்பட்டது. தவிர, போப் ஆண்டவருக்கு அன்னை மீது அபாரமான மதிப்பும், அன்பும் உண்டு. எனவேதான், விதிகளைத் தளர்த்தி கௌவரம் வழங்கப்பட்டுள்ளது.''

- எஸ். சந்திரமௌளி

படங்கள்: யோகா, மீடியா ராமு



## பரிதாப பாப்பா!

அரபு நாட்டு குழந்தையல்ல; இது லண்டன் குழந்தை! இதன் பிரச்னை, சூரிய ஒளி உடம்பில் பட்டாலே உடலெங்கும் கொப்பளங்கள் உண்டாகிவிடும். 42 டிகிரி வெயில் அடித்தாலும், இந்த உடையுடன் இருந்தாக வேண்டும். இந்தப் பதினெட்டு மாதக் குழந்தையைக் காப்பாற்ற ஐரோப்பிய மருத்துவர் குழு முயற்சி செய்து வருகிறது!

- பாரீஸ். பார்த்தசாரதி

# நேற்று...இன்று...நாளை...

டிசம்பர் சீசன் நெருங்கும்போது ஒரு பழைய சம்பவம் நினைவுக்கு வருகிறது. மியூஸிக் அகாடமி அரங்கில் எம்.எஸ். அவர்களின் கச்சேரி. முதல் வரிசையில் சதாசிவம் அருகே ஏ.எம்.எம். அருணாசலம் (டி.ஐ. நிறுவனம்) அமர்ந்திருக்கிறார். வழக்கம்போல் ஏதோ ஒரு நல்ல காரியத்துக்கு நிதி உதவிக் கச்சேரிதான். சங்கராபரணம் ராக ஆலாபனை முடிந்ததும் ஏ.எம்.எம்.ஏ. சொல்கிறார் : "சதாசிவம், நான் கொடுத்த பத்தாயிரம் ரூபாயும் இந்த ஒரு ராக ஆலாபனைக்கே சரியாகப் போய் விட்டது. மற்றவை எல்லாம் எனக்கு ஒரு புதையல் கிடைத்த மாதிரிதான்!"

★ ★ ★

ராஜாஜி சுதந்திரா கட்சி ஆரம்பித்த போது அதை கன்சர்வேடிவ் கட்சி என்று

## பள்ளிப் பிள்ளைகளும் பயில்வது பிரபுதேவா நடனமே!

ஏளனமாகப் பேசினார் நேருஜி. ராஜாஜியின் பதில் : "கன்சர்வேடிஸம் என்பது to conserve என்ற வார்த்தையிலிருந்து பிறந்தது. நமது தேசத்தின் பண்பாடு, கலாசாரம் மற்றும் மரபுகளில் என்னவெல்லாம் நல்லன உண்டோ, அவை அனைத்தையும் பாதுகாப்பது கன்சர்வேடிஸம். சுதந்திரா கட்சி அப்படி இருப்பதில் நான் பெருமை கொள்கிறேன்."

★ ★ ★

கலை, இலக்கியம் இவற்றில் மாற்றங்கள் நிகழ்வதும் புதுமைகள் புகுவதும் இயல்பு. இவை வளர்ச்சியின் அறிகுறி. ஆனால் அந்த மாற்றங்களும் புதுமைகளும் மரபுகளையொட்டி அமைய வேண்டும். இதைச் சொல்லிக் கொடுத்து, செய்தும் காட்டியவர் ருக்மிணி தேவி. அவரது நடன நாடகங்களில் பரத நாட்டியத்தையும் கதகளியையும் கும்மி, கோலாட்டம் போன்ற கிராமியக் கலைகளையும் மிக நயம்பட இணைத்தார். அத்துடன் மேல்நாட்டு choreography உத்தியையும் சேர்த்தார். இந்திய நடனக் கலையில் ஒரு புதிய சகாப்தமே உருவாயிற்று. கவனிக்க வேணும். பரதத்தையும் கதகளியையும் அவர் கலப்படம் செய்யவில்லை. கோத்துத்தான் தந்தார். மரபுகளைக் காத்தபடியே புதுமை செய்தார்.

★ ★ ★

திரைப்படங்களில் கர்நாடக சங்கீதம் முக்கியத்துவம் பெற்றிருந்தது போலவே, பரத நாட்டியமும் புகழ் பெற்று விளங்கிய காலம் உண்டு. டப்பா சங்கீதம் சினிமாவை ஆக்கிரமித்த சமயம், ஓரியண்டல் நடனம் என்பதாகவும் ஒன்று புகுந்து கொண்டது. அப்போது ஆரம்பித்த சீரழிவு இன்று பிரபுதேவாவின் நொடிப்பு - வலிப்பு நடனத்தில் வந்து சேர்ந்திருக்கிறது. நாளை எங்கே போகுமோ! பாடலும் இசையும் பாடாவதியாகிவிட்டன. உயர்ந்த இலக்கியம், திரைப்படம் என்றால் அடுத்த முறை இதைவிட உயர்வாக எழுத வேண்டுமே, படம் எடுக்க வேண்டுமே என்ற கவலை பிறக்கும். ஆபாசத்தில் இறங்கிவிட்டாலோ, இது சீக்கிரமே அலுத்துவிடுமே. இதைவிட ஆபாசமாக எப்படி எழுதலாம், படம் பிடிக்கலாம் என்று யோசனை போகிறது!

★ ★ ★

சில தினங்களுக்கு முன் சென்னையில் ஒரு விளம்பரப் பலகை. 'Thunder thighs' என்று. 'இது என்ன புது ஆபாசம்' என்று நாலு நாள் வெறுத்து 'சீச்சீ' சொன்னபிறகு, அதே விளம்பரத்தில் கூடுதல் தகவல்! அது ஏதோ அசைவ உணவுக்கான அறிவிப்பாம்! இதற்குத்தான் 'Thunder thighs' என்று விளம்பர வாசகம். இத்தகைய கற்பனையின் தலையில் இடி விழாதோ!

★ ★ ★







"ஆபாசம் என்பது நம் நாட்டில் மட்டுமா? உலகம் முழுவதும்தான் இருக்கிறது" என்று வாதாடுவார்கள். இந்திரா காந்தி கூட படு அலட்சியமாகச் சொல்லவில்லையா, "Corruption is an international phenomenon" என்று! வேறுபல நாடுகளிலும் ஆபாசம் உண்டுதான். ஆனால் கூடவே மரபு சார்ந்த தங்கள் உன்னதமான கலைகளைக் காக்கவும் வளர்க்கவும் அரும்பாடு படுகிறார்கள். அதற்கு மக்கள் ஆதரவும் உண்டு. T.J.S. ஜியார்ஜ், எக்ஸ்பிரஸ்ஸில் பின் வரும் செய்தியைத் தருகிறார். ஒரு செப்டெம்பர் 11ல் நியூயார்க்கில் உலக வர்த்தகக் கேந்திரம் என்ற இரட்டைக் கோபுரங்கள் மீது பின்லேடனின் ஆட்கள் விமானத்தை மோதச் செய்து அவற்றை அழித்தார்கள் அல்லவா? அங்கே மறுபடியும் வானளாவும் இரட்டைக் கட்டடங்கள் எழப் போகின்றன. வர்த்தகக் கேந்திரம்தான் என்றாலும், இதிலும் ஆறு லட்சம் சதுர அடி கலாசார நிகழ்ச்சிகளுக்காக ஒதுக்கப்படுகிறது! ஆபரா (Opera) எனப்படும் சங்கீதம், பாலே நடனம், நாடகம், நூலகம், அருங்காட்சியகம் முதலியன இதில் அடங்கும். இதற்காக இருநூறு முதல் முன்னூறு மில்லியன் டாலர் வரை ஒதுக்கத் திட்டம். ஆனால் ஒரு நிபந்தனை: தொடர்ந்து மானியங்கள் கேட்கக் கூடாது. இந்த முதலீட்டை வைத்து தொடங்கப்படும் கலைக் கூடங்கள் செழித்து, சம்பாதித்து தங்களைத் தாங்களே போஷித்துக் கொள்ள வேண்டும்.

* * *

உலகின் மிக உயரமான கட்டடம் இன்று கோலாலம்பூரில் உள்ளது. அதைத் தோற்கடிக்கும் விதமாக டாய்வானின் தலைநகர் டாய் பேயில் ஒரு கட்டடம் உருவாகி வருகிறது. நியூயார்க்கின் உலக வர்த்தகக் கேந்திரம் மறுபடி உருவாகும்போது, 'உலகின் மிக உயரமான இரட்டைக் கோபுரங்கள்' என்ற பெருமையைத் திரும்பப் பெறும்.

* * *

உலக நாடுகளிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்க, ஆபாசத்தை இறக்குமதி செய்வதில் அதிக ஆர்வம் காட்டுகிறோம். ஒரு பிரெஞ்சுக்காரன், ருஷ்யன், ஜெர்மானியன் ஆகியோரை, 'கைடு' அமெரிக்காவில் லிங்கன் நினைவிடம் பார்க்க அழைத்துப் போனான். "இதைப் பார்த்தால் உங்களுக்கு என்ன நினைவு வருகிறது?" என்று கேட்டு வைத்தான். ருஷியன் சொன்னான் : "எங்கள் நாட்டின் லெனின் நினைவுக்கு வருகிறார்".

ஜெர்மானியன், "இது போன்ற உறுதியான கட்டடங்கள் அமைக்கும் வழிமுறைகள் நினைவு வருகின்றன" பிரெஞ்சுக்காரன் கூறினான் : "ஓர் அழகிய பெண்ணின் வளைவுகளை எண்ணிப் பார்க்கிறேன்." கைடு ஆச்சரியத்துடன், "ஏன் அப்படி?" என்று கேட்டான். பிரெஞ்சுக்காரன், "எனக்கு எதைப் பார்த்தாலுமே அழகிய பெண்களின் வளைவுகள் தான் நினைவு வரும்" என்றான்.

இன்று பிரெஞ்சுக்காரர்கள் எவ்வளவோ மாறிவிட்டார்கள். அவர்கள் இடத்தைப் பிடிக்க இந்தியன் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறான்.

செம்பியன்

**"மாநகராட்சி மன்றக் கூட்டங்களில் ஆக்கபூர்வமான செயல்பாடுகளைக் காட்டாமல் ஏதாவது ஒரு பிரச்னை உண்டாக்கி வெளியேற்றப்படும் வகையில் நடந்து கொள்கிறீர்கள். அல்லது, நீங்களே வெளியேறுகிறீர்கள் என்றும், ஸ்டாலின் இல்லாமல் சபையை நடத்தக் கூடாது என்ற நோக்கத்தில் தி.மு.க. உறுப்பினர்கள் செயல்படுவதாகவும் விமர்சிக்கப்படுகிறதே! இதற்கெல்லாம் உங்கள் பதில் என்ன?" என்று மாநகராட்சி ஒன்பதாவது மண்டலத் தலைவரும் தி.மு.க. சார்பாக விவாதங்களை மன்றத்தில் எடுத்து வைக்கும் மா. சுப்பிரமணியத்தைக் கேட்டோம்!**

மாநகராட்சி மன்றக் கூட்டத்தில் ஒவ்வொரு முறையும் மக்கள் பிரச்னைகளைத் தான் நாங்கள் எழுப்புகிறோம்.



• மா. சுப்பிரமணியன்

"மாநகராட்சி வேலைகளைச் செய்வதற்கு டெண்டர் விடுவதில் திறந்த முறை டெண்டர் விட வேண்டும்" என்று இரண்டு கூட்டங்களில் வலியுறுத்தினோம். அதனால் வெளியேற்றப்பட்டோம். கத்திப்பாரா சந்திப்பில் பெரிய அளவில் முறைகேடாக வைக்கப்பட்ட முதல்வரின் ஹோர்டிங்கை எடுக்க வேண்டும் என்று கூட்டத்தில் பிரச்னை எழுப்பினோம். அந்த ஹோர்டிங்கை எடுத்தார்கள்.

கோட்டூர் 138வது வட்டத்தில் ஜிப்ஸி காலனியில், ஒரு குடிசைக்கு தலா ஒரு லட்சம் வாங்கிக் கொண்டு, முப்பது குடிசைகள் போட்டதில் ஆளுங்கட்சிப் பிரமுகர்கள் பின்னணியில் இருந்தார்கள். அதை அம்பலப் படுத்தியதற்கு வெளியேற்றினார்கள். ஆனால் கமிஷனர் பிரச்னையில் உள்ள நியாயத்தைப் புரிந்து கொண்டு தக்க நடவடிக்கை எடுத்தார். அதே போல் கோடம்பாக்கம் சாலையில் முப்பத்தியிரண்டு கிரவுண்டு நிலத்தை மாநகராட்சி விளையாட்டு மைதானத்துக்கு கையகப் படுத்தும் விஷயத்தில், தனியாருக்கு ஆதரவாக உச்ச நீதிமன்றத்தில் தீர்ப்பு வந்தபோது, அதே கோர்ட்டில் மறு பரிசிலனை மனுவை மாநகராட்சி தாக்கல் செய்ய வேண்டும், என்று மன்றக் கூட்டத்தில் போராடினோம். அதற்காக வெளியேற்றப்பட்டோம்.

தி.மு.க. ஆட்சியில் கட்டப்பட்ட பள்ளிக் கூட கட்டடங்கள், மேம்பாலங்கள் ஆகியவற்றைச் சோதனை செய்கிறோம் என்று சொல்லி சகட்டு மேனிக்கு இடித்தார்கள். அதைக் கண்டித்ததற்காக வெளியேற்றப்பட்டோம். கண்ணப்பர் திடலை மீன் வியாபாரிகளுக்கு மொத்தமாக குத்தகைக்கு விட்டதைக் கண்டித்து பேசப் போக, இரண்டு கூட்டங்களிலிருந்து வெளியேற்றப்பட்டோம். மாநகராட்சி நகரமைப்பு குழுத் தலைவர் மீதுள்ள குற்றச்சாட்டை விசாரிக்க, தனிக் கூட்டம் போடுமாறு



கேட்டதற்காக சமீபத்தில் வெளியேற்றினார்கள். இது மட்டுமா? குடிநீர்ப் பிரச்னை, ஆக்கிரமிப்பு விவகாரம் என்று எந்தப் பிரச்னையை எழுப்பினாலும் பேச்சை திசை திருப்பும் வகையில் செயல்பட்டு, ரகளையை உருவாக்கி எங்களை வெளியேற்றி விடுகிறார்கள்.

போன டிசம்பரில் என்னை இரண்டு கூட்டங்களில் கலந்து கொள்ளக் கூடாது என்று துணை மேயர் அறிவித்தார். ஆனால் நீதிமன்றத்திற்குச் சென்று, மாநகராட்சிக் கூட்டத்தில் பங்கு பெற அனுமதி பெற்றேன்.

ஜனநாயக மரபுகளை மீறும் இவர்களுக்கு, மக்கள் தக்க சமயத்தில் சரியான வகையில் பாடம் புகட்டுவார்கள்."

**"குட்டு வெளிப்படுவதால், குழப்பம் செய்கிறார்கள்!"**
**- கராத்தே தியாகராஜன் பதிலடி!**

"தி.மு.க.வினர் ஒவ்வொரு முறையும் எங்களை மடக்குவதாக நினைத்துத்தான் பிரச்னைகளைக் கிளப்புகிறார்கள். ஆனால் அவர்கள் எழுப்பும் பிரச்னைகளில் அவர்களே சிக்கிக் கொண்டு அவதிப்படுகிறார்கள். அதற்குக் காரணம், பல பிரச்னைகளில் அடிப்படையாகப் பார்த்தால், மக்கள் நலனுக்கு எதிராகச் செயல்பட்டவர்கள் திமுகவினர் என்பதுதான். அவர்களது சொத்தை வாதத்தை, நாங்கள் தூள் தூளாக்கும்போது அவர்களுக்குக் கோபம் வருகிறது. குழப்பம் உண்டாக்குகிறார்கள், வெளியேறுகிறார்கள், அல்லது வெளியேற்றப் படுகிறார்கள். சமயத்தில் சபைக் காவலர் களையும் தாக்குகிறார்கள்.

# கலாட்டா கார்ப்பரேஷன்!



டெண்டர் பிரச்னையில் திமுக. மண்டலத் தலைவர் மா. சுப்பிரமணியன் பிரச்னையை எழுப்பினாரே தவிர, மாநகராட்சி அதிகாரி யார்மீதாவது புகார் சொல்லி மனு கொடுத்தாரா? அவர் மட்டுமல்ல, மாநகரத்தில் உள்ள பத்து மண்டலங்களில் வேறு எந்த மண்டலத்திலிருந்தும் திமுகவினரிடமிருந்து புகார்கள் கிடையாது. சுப்பிரமணியத்தைத் தவிர மற்ற திமுக. கவுன்ஸிலர்கள் இந்தப் பிரச்னையில் மௌனம் காத்தார்கள். காரணம், மண்டல அலுவலகங்களில் டெண்டர் பாரம் வாங்கி டெண்டர் பெறுவதில் ஆதாயம் அடைந்தவர்கள் திமுக.காரர்கள்தான். இப்போது ரிப்பன் கட்டட வளாகத்திலிருந்தே எல்லா வேலைகளுக்கும் டெண்டர் பாரம் வழங்குவதால், திமுக. தாங்கள் விரித்த வலையில் தாங்களே மாட்டிக் கொண்டார்கள் என்பது தான் உண்மை. ஹோர்டிங் விவகாரம் சிறிய பிரச்னை. முதல்வரின் பிறந்த நாளுக்கு ஹோர்டிங் வைத்தோம். தற்காலிகம் தான். ஆனால் ஆற்காடு வீராசாமி தொடர்பான நிறுவனங்கள்



• கராத்தே தியாகராஜன்

ஹோர்டிங் விவகாரத்தில் கொள்ளையடித்ததைச் சொன்னால் கோபப்படுகிறார்கள். வெளியேறுகிறார்கள். கோட்டூரில் குடிசை போடும் விவகாரம் மாநகராட்சிக்குத் தொடர்பில்லாதது. சம்பந்தப்பட்ட இடம் அண்ணா பல்கலைக் கழகத்துக்குச் சொந்தமானது. முப்பத்திரெண்டு கிரவுண்டு நில விவகாரத்தில் 1973ல் தனியாருக்கு தாரை வார்த்தவர் கலைஞர் கருணாநிதிதான். எம்.ஜி.ஆர். தான் மாநகராட்சிக்கு கையகப்படுத்தினார். வழக்கு உயர்நீதி மன்றத்துக்குச் சென்றபோது அரசுக்கு ஆதரவாகத் தீர்ப்பு வந்தது. தனியார் சுப்ரீம் கோர்ட்டுக்குச் சென்று வென்றார். ஆனால் அந்தத் தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்யாமல் தாமதப்படுத்தி, தனியாருக்கு ஆதரவாகச் செயல்பட்டவர் ஸ்டாலின். இப்போது நாங்கள் உச்சநீதி மன்றத்தில் மறுபரிசீலனைக்காக மனு கொடுத்துள்ளோம். திமுக.வினர் வேஷம் போடுகிறார்கள். இதைச் சொன்னால் கலாட்டா; வெளிநடப்பு!

சந்திப்பு : **ப்ரியன்**
படங்கள் : **ராஜன்**

# பெப்ஸி பிடிக்குமா?

அசின் தொப்புங்கலுக்கு ஒரே குறை!

''என்னோட பேரை தப்புத்தப்பா எழுதறாங்க. நீங்களாவது சரியா எழுதுங்க!'' என்று கேட்டுக் கொண்டார்.

'அசின்' என்றால் 'புனிதமானவள்' என்று அர்த்தமாம்!

'நரேந்திரன் மகன் ஜெயகாந்தன் வகா', 'அம்மா, நானா, ஒக்க தமிழ் அம்மாயி', 'பெப்ஸி', 'சிவமணி 98480 - 22338' இதெல்லாம் அசின் நடிக்கும் படங்கள்! அம்மணியின் பேர் மட்டு மில்லை; நடிக்கும் படங்களின் டைட்டில் களும் புதுமையோ புதுமை!

''சரி... 'பெப்ஸி' படத்துலே நடிச்சிருக்கிங் களே... பெப்ஸி குளிர்பானம் குடிக்கிற பழக்கம் உண்டா?'' என்று கேட்டால்,

''நோ! ஒரு முழுங்குகூடக் குடிச்சதில்லை! தாகம் எடுத்தால் பழரசம் அல்லது தண்ணீர் தான் குடிப்பேன்'' என்று பட்டென்று பதில் வருகிறது!

''சரி, பெப்ஸி குடிக்கிற மாதிரி நடிக்கச் சொன்னா...?''

''நடிப்புதானே...? செஞ்சுட்டாப் போச்சு!''

• டாலி

அட்டை, படங்கள் : சங்கர் சத்தியமூர்த்தி






# வேங்கடேச பண்ணையார் விவகாரம்!

வேங்கடேச பண்ணையார் போலீஸாரைத் தாக்கியபோது தற்காப்புக்காகச் சுட்டுக் கொல்லப்பட்டதாக, போலீஸார் தங்கள் செயலை நியாயப்படுத்தியிருக்கின்றனர். இது குறித்து விசாரிக்க தனி நபர் கமிஷன் அமைத்த முதல்வர், இதையே தமது அரசின் தர்ம பரிபாலனத்துக்கு அத்தாட்சியாக்க முயற்சி செய்கிறார். கருணாநிதியோ, இந்த விசாரணை ஒரு கண்துடைப்பு என்று ஒதுக்கித் தள்ளுகிறார்.

கடந்த பதினெட்டு மாதங்களில் எட்டுப் பேர் தமிழக காவல் துறையினரால் சுட்டுக் கொல்லப்பட்டுள்ளனர். இந்த எட்டுப் பேரும் போலீஸாரை எதிர்த்துத் தாக்கியபோது, தற்காப்புக்காக போலீஸ் சுட்டுக் கொன்றது என்பது போலீஸ் தரப்பு வாதம்.

இந்த எட்டுப் பேரும் காவல் துறையினரால் தேடப்பட்டு வந்தவர்கள், ஏராளமான கிரிமினல் குற்ற வழக்குகளைச் சந்தித்து வந்தவர்கள்தாம். என்றாலும், சுட்டுக் கொன்ற அந்த ஒரு கணத்தின் நியாயத்தைக் கேள்விக்கு உட்படுத்துகிறது பி.யு.சி.எல். பொது மக்களின் சிவில் உரிமைகளுக்காகப் போராடும் இவ்வமைப்பு, குற்றம் சாட்டப் பெற்றோர் விசாரணையின்றிச் சுட்டுக் கொல்லப்படுவதை ஆட்சேபிக்கிறது; குற்றவாளியை நேருக்கு நேர் சந்திப்பதற்கு முன்பு எடுக்கப்பட வேண்டிய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டனவா, என்ற சந்தேகத்தைக் கிளப்புகிறது. அத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்தால், சுட்டுக் கொல்ல வேண்டிய நிர்பந்தம்



கல்கி



2003 நவம்பர் 2
சுபானு ஐப்பசி 16
மலர் : 62
இதழ் : 14

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




ஏற்பட்டிராது ; கைது செய்து விசாரணைக்கு உட்படுத்தியிருக்க முடியும் என்று நம்புகிறது.

அரசியல்வாதிகளின் ஆதரவும் காவல் துறையினரின் ஆசியும் இல்லாமல் இத்தகைய தாதாக்கள் உருவாகி வளர முடியாது என்பதையும் விரிவாக விளக்கியிருக்கிறது பி.யு.சி.எல்.

ஓர் அரசியல்வாதியின் மேற்பார்வையில், காவல்துறையின் ஆசியுடன்தான் ஒரு ரௌடி அல்லது தாதா ஒரு குற்றத்தை இழைத்தான் என்பதை எக்காலத்திலும் நிரூபிக்க முடியாது. காவல் துறை அரசியல்வாதிகளின் கைப்பாவையாக இருப்பதால், அவ்வாறு நிரூபிக்க உதவக்கூடிய சாட்சியங்களை அழிப்பது மிகச் சுலபமாகிவிடுகிறது.

முதல் முறை குற்றம் இழைக்கிறவன் பணத்துக்காகவோ, 'பிழைப்பு'க்காகவோ அதைச் செய்கிறான். அந்த வன்முறைச் செயல் தருகின்ற போதையும் போலியான பராக்கிரம உணர்வும் அவனைத் தொடர்ந்து அதிலே ஈடுபடச் செய்கின்றன. கூலிக்காக குற்றம் இழைத்தது மாறி, குற்றமிழைப்பதே அவனது வாழ்க்கை முறையாகிவிடுகிறது.

அதிலும் கட்டைப் பஞ்சாயத்து என்பது ஏழை எளியோரையும் நிரபராதிகளையும் சித்திரவதைக்கு உள்ளாக்கிக் கசக்கிப் பிழிந்து, பொருள் குவித்துக் கொள்ளும் பாதகச் செயலன்றி வேறில்லை. குற்றவாளி செலுத்தும் அபராதத்தைக் காட்டிலும் 'பஞ்சாயத்து' அவனிடம் வசூலிக்கும் கட்டாயத் தொகை மிக அதிகம். இந்த கட்டைப் பஞ்சாயத்துக்காரர்கள், அரசியல்வாதிகளுடன் தாங்கள் கொண்டுள்ள நெருக்கத்தின் விளைவாகத்தான் துணிச்சலுடன் செயல்படுகிறார்கள்.

தாங்கள் வளர்த்துவிட்ட தாதாக்களும் கட்டைப் பஞ்சாயத்தாரும் தங்களையே மதிக்காத அளவுக்கு வளர்ந்துவிடும்போது, அரசியல்வாதிகளுக்கு கிலி பிடித்துக் கொள்கிறது. தங்கள் வண்டவாளம் வெளியாகும் முன் அவர்களைத் தீர்த்துவிட வேண்டிய கட்டாயம்! 'எப்படியாவது அந்த ஆளைத் தீர்த்துக் கட்டு' என்று காவல் துறைக்கு ஆணை பிறக்கிறது. திடீரென்று ஒரு நாள் காவல் துறையினரின் துப்பாக்கிக்குப் பலியாகிறார் தாதா!

இது வேறு பல நாடுகளிலும் நடக்கின்ற கொடுமைதான். தாதாக்கள் தண்டிக்கப்பட வேண்டியவர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தமிழகத்தில் அடுத்தடுத்து எட்டுப் பேர் விசாரணையின்றி




என்கவுன்டரில் கொல்லப்பட்டது அபாய சமிக்ஞைகளையே உணர்த்துகிறது என்கிறது பி.யு.சி.எல். விசாரணை நடந்தால் உண்மைகள் வெளிப்படும்; காவல் துறை, அரசியல்வாதிகளின் வண்டவாளம் வெளிச்சத்துக்கு வரக் கூடும். அதற்குப் பயந்துதான் இப்படி குறுக்கு வழியில் வழக்கை முடித்திருக்கிறார்கள் என்பது இவர்களுடைய நியாயமான சந்தேகம்.

இவ்வாறு வழக்கை முடித்து விடுவது தவறு என்பதையும் பி.யு.சி.எல். சுட்டிக் காட்டுகிறது. போலீஸார் சுட்டது சரியா இல்லையா என்பதை நீதிமன்றம்தான் தீர்மானிக்க வேண்டும். எனவே வழக்குத் தொடுத்து நடத்த வேண்டும் என்கிறது. 'தாதாக்களைச் சுட்டுத் தள்ளத் தயங்காத போலீஸ், அரசியல்வாதிகளுடன் அந்த தாதாக்களுக்கு உள்ள தொடர்பை ஆராயத் தயங்குவானேன்' என்று கேட்கிறது.

நமது சட்ட அமைப்பானது, குற்றவாளி தண்டிக்கப்படாவிட்டாலும் நிரபராதி தண்டிக்கப்பட்டு விடக்கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருக்கிறது. இந்த உயர்நோக்கைச் சாதகமாக்கிக் கொண்டுதான் ரௌடிகளும் தாதாக்களும் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பிக்கிறார்கள். போதும் போதாததற்கு, அந்த ரௌடிகள் அரசியல் தலைவர்களின் ஆசியும் காவல் துறையினரின் அரவணைப்பும் பெறுகிறபோது, குற்றமும் கொலையும் ரௌடித்தனமும் அங்கீகரிக்கப்பட்ட வாழ்க்கை முறையாக சமுதாயத்தின் அடி மட்டத்தில் வேரூன்றிவிடுகின்றன.

இந்த வாழ்க்கை முறையைக் கடைப்பிடிப்போர் செய்தியில் இடம் பெறுகிறார்கள்; மீடியாவால் ஹீரோக்கள் ஆக்கப்படுகிறார்கள்; நிறையப் பணமும் பார்க்கிறார்கள்; தங்களைச் சுற்றியுள்ள ஏழை எளிய மக்களுக்குத் தவறான முன்னுதாரணமாகிறார்கள்; விரைவில் தேர்தல் களத்தில் இறங்கி அரசியல் அந்தஸ்தும் பெற்றுவிடுகிறார்கள்!

சமுதாயமும் அரசியலும் ஒரு சேர விரைவுப் பாதையில் சீரழிகின்றன. இந்தப் பிரச்னையை இன்றையச் சூழலில் சமாளித்து, நிலைமையில் முன்னேற்றம் ஏற்படுத்த வேண்டுமானால், அது தேர்தல் கமிஷனால் மட்டுமே முடியும். அரசியலில் லஞ்ச-ஊழல் குற்றவாளிகள், தாதாக்கள் முதலியோரின் பங்கைக் குறைக்க, அது ஏற்கெனவே சில நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது. உறுதியுடன் நின்று, மேலும் அரசியலைத் தூய்மைப் படுத்த தேர்தல் கமிஷனால் முடியும். அத்துடன் வாக்காளர்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தவும், தேர்தல் கமிஷன் சில திட்டங்களை வகுத்து அமல்படுத்த வேண்டும்.

# தொழில் ரகசியம்

■ ரிஷபன் ■

டைரக்டர் வெளியே வந்து அலுப்புடன் சிகரெட்டைப் பற்ற வைத்தார்.

ஒரு மணி நேரமாய்ப் போராட்டம். எதிர்பார்த்தபடி நச்சென்று பாடல் வரிகள் வரவில்லை.

"இங்கிலீஷ் வேணாம். மெலடி ஸாங்... பச்சுனு உக்காரணும்..."

விதவிதமாய் டிஸ்கஷன்கள் போட்டும், சொன்ன வரிகளில் திருப்தி வராமல் டைரக்டர் முகம் நெளிந்தது.

''அவளை அவன் மனசுக்குள்ளே லவ் பண்றான். இன்னும் வெளிப்படுத்தலே... ஒரு போட்டியில கலந்துக்கப் பிரியம் இல்லாம அவன் ஒதுங்கறப்ப... அவதான் வந்து என்கரேஜ் பண்றா... அந்த சிச்சிவேஷன்ல பாட்டு..."

வாட்டர் பாட்டிலை வைத்துவிட்டு ஒதுங்கிய சரவணன் கூர்ந்து கவனித்தான். டைரக்டர் வெளியே வரக் கூட வந்தான். சிகரெட்டைக் கீழே போட்டு நசுக்கியவரிடம் வாட்டர் பாட்டிலை நீட்டினான்.

"என்ன..." என்றார் அதட்டலாய்.

"நான் சொல்லட்டுமா... பாட்டு..."

முறைப்பைக் கவனிக்காதவன் போல மெலிதாய்ப் பாடினான்.

"உன் விழிவழி கசிகிற வெளிச்சம் என் சுயபலம் புரிகிற துவக்கம்..."

டைரக்டர் மலர்ந்து போனார். "சபாஷ்".

சரவணனை உள்ளே இழுத்துப் போனார். ஒரே நாளில் பிரபலமாகி விட்டான்.

அடுத்த வருடம். படப்பிடிப்பு. டைரக்டர் முகம் சுளித்து நின்றார்.

"முக்கோணக் காதல். நச்சுனு வசனம் சொல்லுன்னா..."

ஓரமாய் நின்ற உதவியாளன் முகத்தில் பிரகாசம் படர்வதைத் தற்செயலாய் சரவணன் பார்த்தான். அவனைத் தனியே நகர்த்திப் போனான்.

"என்ன... வசனமா... நீயா..."

"நிலா பூமியைச் சுத்துது. பூமியோ சூரியனைச் சுத்துது. இயற்கையே இப்படி முக்கோணக் காதல்ல மாட்டித் தவிக்கிறப்ப. நீயோ... நானோ.. என்ன செய்யிறது.." என்றான் படபடவென.

"போடா... டைரக்டர் படா கோபக்காரர் சீவிடுவாரு. வந்தமா.. நம்ம வேலையைப் பார்த்தமான்னு இரு... புரிஞ்சுதா...?"

உதவியாளன் பயத்துடன் தலையாட்டினான். சரவணன் உள்ளே போனான்.

''என்னமோ சினிமான்னா விளையாட்டாப் போச்சு. நினைச்சா பெரிய ஆளா ஆயிர முடியுமா.. எத்தனை வருசம் போராடணும்.. அதுக்கு!







இந்த ஓவியங்கள் எல்லாம் சிரித்துக் கொண்டிருக்கும் இந்தச் சிறுவனின் படைப்புகள்!

''இதிலென்ன விசேஷம்?'' என்கிறீர்களா?

இவற்றை, ஜனார்த்தனன் கையால் வரையவில்லை. அவனால் வரையவும் முடியாது..! காரணம்... அடுத்த பக்கம்...



**சா**யங்காலம், பள்ளியை விட்டு வந்தவுடன் ஸ்கூல் பேகைத் தூக்கி எறிந்துவிட்டு, அம்மா தரும் காபியைக் கூடக் குடிக்காமல், விளையாடக் கிளம்பிவிடுவான் பத்து வயது துருதுரு ஜனார்த்தனன்.

அன்றைக்கும் அப்படித்தான். மொட்டை மாடிக்கு ஒரே ஓட்டமாய் ஓடிப் போகிறான் ஜனார்த்தனன்.



# சபாஷ் ஜனா!



அங்கே கிடந்த இரும்புக் கம்பி ஒன்று அவனது கண்களில் பட்டுவிட, அதைத் தூக்கி சினிமா ஹீரோ சிலம்பு சுழற்றுவதுபோல, சுழற்றி விளையாடியிருக்கிறான். எதிர்பாராதவிதமாக வீட்டின் அருகில் செல்லும் மின்சாரக் கம்பியை, அது தொட்டுவிட, அடுத்த விநாடியே ஜனார்த்தனன் ஷாக் அடிக்கப்பட்டு, தூக்கி எறியப்படுகிறான்.

சாத்தான் புகுந்த அந்த மின்சாரக் கம்பி அடுத்த கம்பியையும் தொட்டதால், 'எர்த்' ஆகி, அங்கிருந்த டிரான்ஸ்பாரம் வெடித்துச் சிதற, அந்தப் பெருஞ் சப்தத்தில், ஜனார்த்தனனின் அலறல் அமுங்கிப் போகிறது.

காபித் தம்ளரை எடுத்துக் கொண்டு மொட்டை மாடிக்குப் போன தாய் புவனேஸ்வரி, அங்கு கரிக்கட்டையாய்க் கிடந்தபடி முனகிக் கொண்டிருக்கும் ஜனார்த்தனனைப் பார்த்துவிட்டு 'ஓ' என்று அலறுகிறார்.

அக்கம்பக்கத்தினர் கூடுகிறார்கள். ஜனார்த்தனனின் நிலையைக் கண்டு என்ன செய்வது என்றே தெரியாமல் திகைத்தபடி அனைவரும் நிற்க, யாரோ சுதாரித்துக் கொண்டு போரூர் மருத்துவ மனைக்குக் கொண்டு செல்கிறார்கள். அங்கே முதலுதவி தரப்பட்டு ஸ்டான்லி மருத்துவமனைக்குக் கொண்டு செல்கிறார்கள்.

தெய்வமே நேரில் வந்ததுபோல குழந்தை நல நிபுணர் டாக்டர் சீனிராஜ் இருக்கவே, எமனிடம் போன உயிரை, எப்படியோ மீட்டு விடுகிறார்.

பதின்மூன்று துறைகளைச் சேர்ந்த மருத்துவ நிபுணர்களைக் கலந்து ஆலோசித்து ஒரே நாளில் விதவிதமான கூட்டுச் சிகிச்சைகள் தரப்பட்டு ஆபரேஷன் நடக்கிறது.

கருகிப் போன வலக்கையை தோள்பட்டையிலிருந்தும், இடக்கையை முழங்கைக்குக் கீழிருந்தும் வலது கால் பாதங்களின் அத்தனை விரல்களையும், இடது காலை முழங்கால் பகுதியிலிருந்தும், முற்றிலுமாக அகற்றியபோது ஆபரேஷன் செய்த மருத்துவக்குழுவே கலங்கியதாம்.

"கை, காலெல்லாம் போயிடுச்சேன்னு அழாதே! மனசுல ஊக்கமிருந்தா எதையும் சாதிக்கலாம். இனி வாயாலே எழுதிப் பார்" என்று தட்டிக் கொடுத்து உற்சாகமூட்டியவரும் டாக்டர் சீனிராஜ்தானாம்.



"அந்த ஆக்ஸிடெண்ட்டுக்கு அப்புறமா, நான் வீட்டுக்கு வர்றதுக்கே ஒரு வருஷமாயிடுச்சு. என்னாலே சாப்பிட முடியாது. நடக்க முடியாது. எழுத முடியாது. என்னோட்ட நிலைமையைப் பார்த்துட்டு, அம்மா அப்பா, தங்கச்சி சந்தியா, எல்லாம் படற வேதனையைப் பார்த்துட்டு ரொம்ப அழுகையா வரும். புண் எல்லாம் ஆறிப் போனதும், செயற்கைக் கால் பொருத்தி, பயிற்சி தந்தார்கள். கனமான செயற்கை உறுப்புகளைப் பொருத்திவிட்டு, பயிற்சி செய்தபோது, ஏற்பட்ட வலியை என்னாலே பொறுத்துக்கவே முடியலை.

"அம்மா.. பெரிய பாறாங்கல்லைத் தூக்கிப்போட்ட மாதிரி வலிக்குதும்மா... நான் இப்படியே தவழ்ந்துக்கிட்டு இருக்கேம்மா.." என்று அழுதிருக்கேன்.

ஆனால், "பொறுத்துக்க ஜனா. ஈஸிதான், நீ நல்லா நடப்பே.." என்று நம்பிக்கை ஊட்டினார்கள்.

என்ன ஆச்சர்யம்! ஒரே மாதத்தில் மெள்ள நடக்க ஆரம்பித்துவிட்டேன். வலி கொஞ்சம்கூட இல்லை.

என்னோட ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் ஸ்கூலுக்குப் போறப்ப நான் மட்டும் வீட்டுலே இருக்க ரொம்ப போரடிச்சுது.

"கை போனா என்ன? வாயாலே எழுதப் பழகு"னு டாக்டர் அறிவுரை சொன்னது ஞாபகத்துக்கு வரவே, பென்சிலை வாயிலே கடிச்சுக்கிட்டு எழுத ஆரம்பிச்சேன். ஆனா அது நினைச்ச மாதிரி, ஈஸியா இல்ல. வாயிலே இருந்து எச்சில் ஒழுகி, பேப்பரைப் பாழாக்கிடும். பென்சில் அண்ணப் பகுதியைக் குத்திப் புண்ணாக்கிடும். தொடர்ந்து பென்சிலை வாயில் வைத்திருந்தாலே தாடை மரத்துப் போயிடும். வலிக்கும். ஆனால், நான் முயற்சியை விடவே இல்லை. கையாலேயே எழுதற மாதிரி அழகா எழுத ஆரம்பிச்சுட்டேன்.'' என்று தலை சாய்த்து வெட்கத்துடன் சிரித்தான் ஜனார்த்தனன்.

இப்போது வீட்டுக்குப் பக்கத்திலேயே இருக்கும் பள்ளியில் சேர்ந்துவிட்டான் ஜனார்த்தனன். ஆரம்பத்தில் வகுப்பு மாணவர்கள் பரிதாபமாகப் பார்த்தார்கள். அருகில் வருவதற்கே தயங்கினார்களாம்.

"இவங்க எல்லாம் என் கிட்டேயே வர மாட்டேங்கிறாங்க. பயந்து தள்ளிப் போயிடறாங்க. ஏன் மிஸ்?"னு டீச்சர் கிட்டேயே கேட்டேன்.

"உன்னைத் தொட்டாலோ, உரசினாலோ நீ கீழே விழுந்துடுவேங்கிற பயம்தான். இனி அப்படிச் செய்ய மாட்டாங்க. நான் சொல்றேன்" என்று தைரியமூட்டினார்.

அதுக்கப்புறம் எல்லாரும் என்கூட சகஜமாகப் பேசறாங்க. பழகறாங்க.

# வேதமே பயின்ற வீடு!



ஸ்ரீ காஞ்சி பரமாச்சாரியார் சுவாமிகள் 1908லிருந்து 1912 வரை திருச்சி மகேந்திரமங்களம் கிராமத்தில் உள்ள கே.எஸ்.டி பண்ணை வீட்டின் மாடியில் தங்கியிருந்து வேதப்பியாசம் பயின்றார். சென்னை ஃபோட்டோ கண்ணன் தயாரித்துக் கொடுத்த ஸ்ரீகாஞ்சி மடம் எழுபது பீடாதிபதிகளுடன் கூடிய மகா சுவாமிகளின் பெரிய படம் வைத்து பூஜிக்கப்படுகிறது. மகாசுவாமிகள் இங்கு தங்கியிருந்த காலத்தில் காவிரிக் கரை ஓரமாக ஆதிசங்கரர் திருக்கோவில் ஒன்றை ஸ்தாபிதம் செய்து தரிசனம் செய்து வந்தார்கள். அந்தக் கோவிலில் ஸ்ரீ சங்கரமடம் சார்பாக நித்தியபூஜை நடக்கிறது.

தகவல், படங்கள்:
**லயன் கே. துளசிதாஸன், முசிறி**

ஸ்கூல்ல என்னை எல்லாருக்கும் ரொம்பப் பிடிக்கும்'' என்கிறான்.

பொழுது போக்காக ஓவியங்களையும் வரைய ஆரம்பித்தபோது, அது ஜனார்த்தனை உலகப்புகழ் பெற வைக்கும் என யார்தான் நினைத்திருப்பார்கள்!

ஜனார்த்தனனை ஊக்குவிக்கும் வகையில் அவனை பல்வேறு ஓவியப் போட்டிகளில் கலந்து கொள்ள வைக்கும் பள்ளி நிர்வாகம், ஒரு சமயம் தேசிய அளவில் விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட் நடத்திய ஓவியப் போட்டியில் பங்கேற்க வைக்க, ஜனார்த்தனனுக்குக் கிடைத்தது முதல் பரிசு.

''எனக்கு எப்பவும் வேகமாப் போறது பிடிக்கும். அதனாலே பஸ், கார் ஸ்பீடா போற மாதிரி சாலைக் காட்சியை வரைந்திருந்தேன். கோடுகள் எல்லாம் நேராகவும் வண்ணங்கள் எல்லாம் இயற்கையாவும், ரொம்ப தத்ரூபமா இருக்கிறதா பாராட்டினாங்க. எழுநூற்று ஐம்பது ரூபாய் ரொக்கத் தொகை பரிசா கிடைச்சது. வீட்டுக்கு வர்ற வழியிலேயே நிறைய பிரஷ், கலர்னு அப்பா வாங்கிக் கொடுத்தார். இந்தப் பரிசளிப்பு விழாவும் ரொம்ப விமரிசையா செஞ்சாங்க. நான் பரிசு வாங்கறதை பி.பி.ஸி.யில் காட்டினாங்க. அன்னிக்குதான் எங்கம்மா முகத்துலே சிரிப்பையே பார்த்தேன்'' என்கிறான் ஜனார்த்தனன்.

முக்தி ஃபவுண்டேஷன், ரஷ்ய கலாசாரம், ஹெல்பேஜ் போன்ற பற்பல அமைப்புகள் நடத்திய ஓவியப் போட்டிகளில் கலந்து கொண்டு, நிறையப் பரிசுகளுக்கும் மெடல்களும் வாங்கியிருக்கிறான் ஜனார்த்தனன்.

வாயால் ஓவியம் வரையும் இவனது திறமையைக் கேள்விப்பட்டு, இருபத்தையாயிரம் பண உதவி செய்திருக்கிறார் தமிழக முதல்வர் ஜெயலலிதா.

இந்த நிலைமையிலும் வேகமாக சைக்கிள் ஓட்டுகிறான் எனக் கேள்விப்பட்டு, ஜனார்த்தனனுக்கு செயற்கை உறுப்புகள் வழங்கி நெகிழ்ந்து போனாராம் நடிகர் அஜித்குமார்.

பேட்டி, படங்கள்:
**குட்டி கண்ணன்**

# அடிச்சு நொறுக்குங்க!



இசையில் ஆண் பெண் பேதமில்லைதான் ஆனால் மிருதங்கம், கடம், மேளம், ட்ரம்ஸ், தவில்... என்று 'தடும் தடும்' இசை தரும் அதிரடிப் பெண் கலைஞர்கள் மிக மிகக் குறைவு. பூங்கரங்களால் கனமான இசைக் கருவிகளைக் கையாள முடியாதா?

"முடியுமே" என்கிறார் மேற்கத்திய இசைக் குழுவில் ட்ரம்ஸ் வாசிக்கும் இளம் பெண் யாஸ்மின் காலி. வெள்ளைக்கார அம்மா, முகமதிய அப்பாவுக்குப் பிறந்த யாஸ்மின் பெங்களூரின் முதல் டி.ஜே! (தென்னிந்தியாவின் முதல்!)

"நான் நல்லாப் பாடுவேன். டிஸ்கோ ஜாக்கியாக பப் மற்றும் டிஸ்கோக்களில் வேலை பார்த்தேன். என்னவோ எனக்குப் பிடிக்கவில்லை. டிரம்ஸ் இசை எப்பவுமே என்னை மோகம் கொள்ள வைக்கும். ட்ரம்ஸ் வாசிக்கலாம்னு ஜெஃப்ரி போப்பிடம் போனேன். இரண்டு மாதம்தான் போயிருப்பேன். என்னுடைய வால்தனம் தாங்காமல் 'நின்னுக்கோ' என்று சொல்லிவிட்டார். அப்புறம் என்ன? சுயம்புதான். நானே ப்ராக்டிஸ் பண்ணி வாசிக்க ஆரம்பிச்சுட்டேன். இப்போது 'மைண்ட்ஷேர்' என்ற மெட்டல் பாண்ட் குழுவில் ட்ரம்ஸ் வாசிக்கிறேன். அருமையான வாத்தியக் கருவி. வாசிக்கும்போது உற்சாகம் கரை புரண்டு மனசுக்குள்ளே பேயாட்டம் ஆடறேன். ஆனா இந்த ஆம்பளைங்களோட கணிப்பே வேறே. ஒண்ணு நம்பளை ஓரேயடியா ஒதுக்கி விட வேண்டியது, இவ என்னத்தை வாசிக்கப் போறான்னு! இல்ல "பாவம், பொண்ணு வாசிக்கறா" அப்படின்னு பரிதாபப் பட வேண்டியது. அதுவும் இல்லன்னா பயங்கரமா வழிய வேண்டியது. மிக மிகச் சில ஆண்களே மரியாதை கொடுப்பார்கள். நான் சரியாக வாசிக்கிறேனா இல்லையா, அது பற்றி கருத்துச் சொல்லட்டும். அதை விட்டுவிட்டு ஆண் பெண் பேதம் எதற்கு?" சூடாகக் கேட்கிறார் யாஸ்மின்!

ஜாஸ், பாப், ராஜ்... என பல வித இசைப் பரிமாணங்கள் யாஸ்மினுக்கு அத்துப்படி. "எனக்கு ஏ.ஆர். ரஹ்மான் மியூசிக் ரொம்பப் பிடிக்கும். (பிடிக்காதுன்னு சொல்றவங்களுக்குத் தான் ஏதோ பிடிச்சிருக்குன்னு அர்த்தம்) மெலடிதான் மனசைக் கவருகிறது. 'வசீகரா...' அடிக்கடி முணுமுணுக்கும் பாடல். எங்கம்மா என்னை 'ராக் ஸ்டார்'னு எல்லோரிடமும் அறிமுகப்படுத்தி என்னை வெட்கப்பட வைக்கிறார். பாப் மியூசிக்கில் என்னைக் கவர்ந்த பாடகி விட்னி ஹூஸ்டன். அப்புறம் ஃபேவரிட் பாண்ட் 'டெத்'. பேர்தான் ஒரு மாதிரி, ஆனா கலக்கல் மியூசிக்பா...!" என படபடவென்று பேசும் யாஸ்மின் 'ரேவ்' இசை இதழில் நிருபராகப் பணியாற்றுகிறார். இசை நிகழ்ச்சிகள் பற்றி இவர் எழுதும் காரசாரமான விமர்சனங்களால் படு பாப்புலர். மாடர்ன் சுப்புடு!

\- லதா சேகர்

# விழுவதும் எழுவதும்...

விழுந்ததும் எழுவது
இழிவல்ல.
விழும்போதெல்லாம்
செய்ய வேண்டிய முதல் காரியம்
அதுதான்!

மண்ணில் விழுந்து
புதைந்தாலும்
வான் நோக்கி எழும் விதைகள்

ஒடுக்கும் குளிர்
பனிப் போர்வை போர்த்தினாலும்
நிமிர்ந்து நிற்கும் புல்தலைகள்...

விழுதுகள்
மண் நோக்கி விழுவதுகூட
வளர்த்த மரத்தை விழாமல்
காக்கத்தான்!

எழும்போதெல்லாம்
விழுந்து கொண்டிருந்தாலும்
தளராது.



கரையைத் தொட்ட
வெற்றிக் களிப்பில் திரும்பும்
கடல் அலைகள் -

விழுந்து விழுந்து, எழுந்ததில்தான்
ஒரு சிலந்தி எழுப்பியது
இராபர்ட் புரூஸை...

அனிச்சையாய்
கழன்று விழுந்ததுதான்
ஆப்பிள்!
அதனால் எழுந்தவன்
ஐசக் நியூட்டன்!

உயிரின் துளியாய் உலகில்
விழுந்தது முதல்
எத்தனை முறை விழுந்திருப்போம் நாம்?

அதற்காக
அழுது -
அடங்கி -
எழுந்த போதெல்லாம்
எத்தனை களிப்பு...
எத்தனையெத்தனை கைத்தட்டல்...

விழுந்தவர் எழுவது
இழிவாகுமா?
விழும்போதெல்லாம் எழ
முயலாது போவதை விட!

- வத்சலா முத்துக்குமார்

## கொத்துக் கொத்தாக முடி கொட்டுவதையும் வழுக்கையையும் தவிர்க்க இயலுமா?

## நிச்சயமாக இயலும்! வழங்குகிறோம் புதிய, மேம்படுத்தப்பட்ட

# ஹேர் ப்ளஸ் ஹேர் டானிக்

### அழகான கேசம் ஆரோக்கியம் பேசும்




ஹேர் ப்ளஸ் ஹேர் டானிக் இந்தியாவின் பாரம்பரிய மிக்க சித்த மருத்துவ முறையில் கிடைத்தற்கரிய மூலிகைகளின் பசுமையான சாறு மற்றும் இயற்கை மூலப் பொருட்கள் கொண்டு மிகவும் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. ஹேர் ப்ளஸ் ஹேர் டானிக் எவ்வளவு தீவிரமாக மற்றும் கொத்துக் கொத்தாக முடி கொட்டினாலும் பதினைந்தே நாட்களில் தடுத்து நிறுத்தும் ஆற்றல் கொண்டது. மேலும் பூச்சி வெட்டு, பொடுகு, இளநரை, செம்பட்டை, தலை அரிப்பு, தலையில் செதில் செதிலாக வெள்ளை நிறத்தில் தோன்றுதல், தீவிரமான நோய்த் தொற்றுதல்களுக்குப் பிறகு ஏற்படும் கேச இழப்பு, பெண்களுக்கு பிரசவத்திற்குப் பிறகு ஏற்படும் கேச இழப்பு முதலியவற்றைப் போக்கி அடர்த்தியான கருங்கூந்தல் செழித்து வளரச் செய்கின்றது. சித்த வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்டது. எந்தவிதமான பக்க விளைவுகளும் இல்லாதது.

**கீழ்க்கண்ட இடங்களில் மட்டும் கிடைக்கும்:**

சென்னை: சுபா மெடிக்கல்ஸ், மேற்கு மாம்பலம் Ph: 24843478, லோகு பார்மஸி, கே.கே நகர், Ph: 24747385, குப்பர் மெடிக்கல்ஸ், திருவான்மியூர், Ph: 24451944, சேதுராம் & கோ, R.A புரம் Ph: 24334160, அடைக்கப்பா மெடிக்கல்ஸ், மயிலாப்பூர், Ph: 24933293, ஸ்ரீகாயத்ரி மெடிக்கல்ஸ், பூந்தமல்லி, Ph: 26274450, சரவணா மெடிக்கல்ஸ், மேற்கு மாம்பலம் Ph: 22266813, வெங்கடேஸ்வரா மெடிக்கல்ஸ், குரோம்பேட்டை, Ph: 22211719 சாம் மெடிக்கல்ஸ், சைதாப்பேட்டை Ph: 24331845, சரவணா மெடிக்கல்ஸ், கோடம்பாக்கம், Ph: 2472660, ஸ்ரீகுமரன் மெடிக்கல்ஸ், வடபழனி Ph: 24724794, S.S கெமிஸ்ட், அண்ணாநகர் Ph: 26268010, ராசி மெடிக்கல்ஸ், அமிஞ்சிகரை, Ph: 26461762, பழனி மெடிக்கல்ஸ், அம்பத்தூர் எவரெஸ்ட் மெடிக்கல்ஸ், ராஜாராம் மேத்தா நகர், Ph: 23743704, முத்து மெடிக்கல்ஸ், அரும்பாக்கம், Ph: 24750190, ஸ்ரீலெட்சுமி மெடிக்கல்ஸ், தேனாம்பேட்டை, Ph: 24331854, ஆன்ட்டி அங்கிள் மெடிக்கல்ஸ், அடையார், Ph: 24413758 ஸ்ரீராம் மெடிக்கல்ஸ், ஜாபர்கான்பேட் Ph: 24745792 ஸ்மித் ஸ்டாக்கிங் & கோ, N.S.C போஸ் ரோடு, Ph: 25383171 செங்கல்பட்டு : ஷிஃபா மெடிக்கல்ஸ், Ph: 2423800 **திண்டிவனம்** செந்தில் மருந்தகம், நேரு வீதி, **நெய்வேலி:** ஜெயா மெடிக்கல் ஸ்டோர்ஸ், Ph: 2522241, **கடலூர்** : மஹாராஜா மெடிக்கல்ஸ், Ph: 223704 **விழுப்புரம்** ஸ்டார் மெடிக்கல் ஏஜென்ஸீஸ், Ph: 222758, **திருச்சி** வாசன் மெடிக்கல் ஹால், Ph: 2704213, 2412966, 2700826 **திருவண்ணாமலை** : மஹாராஜா மெடிக்கல்ஸ் Ph: 223707 **காஞ்சிபுரம்:** தமிழ்நாடு மெடிக்கல்ஸ், Ph: 222285 **வேலூர்** : ராஜன் மெடிக்கல்ஸ், ஆபிசர்ஸ் லைன், Ph: 2225368 **காரைக்குடி:** ரோஜா மெடிக்கல்ஸ், Ph: 2438471, **திருப்பத்தூர் (வேலூர்)** மதுரா மெடிக்கல்ஸ், Ph: 220699, **கள்ளக்குறிச்சி** : ரங்கா மெடிக்கல்ஸ், Ph: 223559 **தேவகோட்டை** செல்வா மெடிக்கல்ஸ், Ph: 2373555, **தஞ்சாவூர்** வாசன் மெடிக்கல் சென்டர், Ph: 270096, 278207 ஸ்டேட் மெடிக்கல் மார்ட், Ph: 274442, 231949 **புதுக்கோட்டை:** விநாயகா பார்மஸி, Ph: 221934, **கும்பகோணம்** தி பாப்புலர் டிரக் ஹவுஸ், Ph: 2422028, **திருவாரூர்:** சரோ மெடிக்கல்ஸ், Ph: 240525, **மயிலாடுதுறை** தரணி டிபார்ட்மெண்ட் ஸ்டோர், Ph: 222968, **நாகப்பட்டினம்:** நாகை மெடிக்கல்ஸ் ஸ்டோர்ஸ், Ph: 242034, **பட்டுக்கோட்டை:** ஹமீதியா மெடிக்கல்ஸ், Ph: 252504, **மன்னார்குடி:** மீனா மெடிக்கல்ஸ், Ph: 222665, **அறந்தாங்கி:** தமிழ்நாடு மெடிக்கல்ஸ், Ph: 222082, **சிவகங்கை** ஸ்ரீபாலாஜி மெடிக்கல்ஸ், Ph: 244934 **திண்டுக்கல்:** K.M. மெடிக்கல் ஸ்டோர்ஸ், சன்னதி தெரு, Ph: 2433104 **உசிலம்பட்டி** : ஸ்ரீசரவணா மெடிக்கல்ஸ், Ph: 251073, திருப்பூர் மெடிக்கல்ஸ், **தேனி:** ராஜாராம் மெடிக்கல்ஸ், Ph: 253401 **பழனி:** ஜெயா மெடிக்கல் மார்ட், Ph: 242289 **திருப்பூர்:** பாலா மெடிக்கல் மார்ட், Ph: 2240610 சீதா மெடிக்கல் ஸ்டோர்ஸ், Ph: 2241311 **சீதா** பார்மஸி, அவிநாசி ரோடு, Ph: 2205069, **சேலம்:** சாம்ரோசு பார்மஸி, Ph: 2264816 ரோசு பார்மஸி Ph: 2265380 **கரூர்:** பாலா மெடிக்கல்ஸ், Ph: 240721 **ஈரோடு:** ஸ்ரீகண்ணன் மெடிக்கல் ஏஜென்ஸி, 21, அண்ணாஜி ரோடு, Ph: 222373, **தர்மபுரி:** விஜயலெட்சுமி மெடிக்கல்ஸ், ஆறுமுக ஆசாரி தெரு, Ph: 260222 **ஓசூர்:** மூர்த்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ் M.G ரோடு, Ph: 242201 **கோயம்புத்தூர்:** சுந்தரம் பார்மஸி, சாய்பாபா காலனி, Ph: 2445830, ஸ்ரீகண்ணன் டிபார்ட்மெண்ட் ஸ்டோர், ராஜாஜி தெரு, Ph: 2231596, காசிநாத் அன் கோ, டவுன்ஹால், புவனா மெடிக்கல் பங்கஜா மில் ரோடு, Ph: 2322573 அழகு பார்மஸியின் அனைத்து கிளைகள், **உடுமலைப்பேட்டை:** ஜம் ஜம் மெடிக்கல்ஸ், Ph: 224563 **பொள்ளாச்சி** ராமநாதன் மெடிக்கல்ஸ், Ph: 2227161 **மதுரை:** தனலெட்சுமி & கோ, வடக்கு சித்திரை வீதி, Ph: 2631582 **பரமக்குடி:** ஜனதா மெடிக்கல் மார்ட், Ph: 225364 **இராமநாதபுரம்:** நியூ பாம்பே மெடிக்கல்ஸ், தேவிபட்டினம் ரோடு, Ph: 224529 **அருப்புக்கோட்டை:** K.M. மெடிக்கல் ஸ்டோர், Ph: 2220612, **விருதுநகர்:** சண்முகம் மெடிக்கல் ஹால், Ph: 2346072, **ராஜபாளையம்** : V.S. திருப்பதிராஜா சன் மெடிக்கல்ஸ், குமரன் மெடிக்கல்ஸ் Ph: 2522289, **கோவில்பட்டி:** சாந்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ், TNB பேங்க் அருகில், **தூத்துக்குடி:** சரவணா மெடிக்கல்ஸ், டெலிகிராப் ஆபீஸ் ரோடு, Ph: 2326340 **திருநெல்வேலி** செயின்ட் மேரீஸ் மெடிக்கல்ஸ்டோர்ஸ், Ph: 2339044 **நாகர்கோவில்:** தேவ் மெடிக்கல்ஸ், Ph: 2232096, Stockist for Chennai Area : Sri Balaji Agency, Ph: 26581880, Stockist for Trichy & Tanjore Area: Ramana Agency, Ph: 0452 - 2345149, Stockist for Kovai & Salem Area: Saratha Pharma Distributers, Ph: 0422-2430448, Stockist for Madurai & South Tamilnadu: Sri Nagappa Agency, Ph:0452 - 2349354 & Dhanalakshmi & Co, Ph: 2621421.

வளமாயும் வனப்பாயும் இருந்த தஞ்சைபுரி, இன்றைக்கு வற்றி வறண்டு விட்டாலும், நெஞ்சை அள்ளும் தஞ்சையாகவே இருப்பதற்குக் காரணம் அங்கே கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் பெருங் கோயிலே.

பதிமூன்று தளங்களைக் கொண்ட இக் கோயில் விமானத்தின் வடபுற மூன்றாவது தளத்திற்கு மேலுள்ள வட்டப் பிரபையில் ஓர் அயல்நாட்டவர் தொப்பித் தலையுடன் நவீன உடையில் காட்சி தருகிறார்.

சோழர் காலத்தில் தமிழருக்கும் சீனருக்கும் நல்ல வாணிப உறவு இருந்தது என்பது வரலாற்று உண்மை. இவ் வுருவம் சீன வியாபாரியின் முகமா? வணிகத்துக்காக வந்த சீனன் ஒருவனுக்கு, ஒப்புயர்வில்லாத தமிழ்க் கோயிலின் விமானத்தில் இடம் தருவார்களா...? அதற்கான சான்றோ, தடயமோ இல்லையே!

மார்க்கோபோலோ என்ற போர்ச்சுகீசியப் பயணியின் முகமாக இருக்கலாமோ என்று யோசித்தால், மார்க்கோபோலாவுக்கும் தஞ்சையை ஆண்ட மன்னர்களுக்கும் வேறு எவ்விதத் தொடர்பும் இருந்ததாகத் தெரியவில்லை.

1675ல் தஞ்சையின் ஆட்சிப் பொறுப்பேற்று பெருங்கோயில் திருப்பணி செய்து வந்த நாயக்கர்களில், இரகுநாத நாயக்கரின் செப்புப் படிமம் மட்டுமே இதுவரை நமக்குக் கிடைத்திருக்கிறது.

இரகுநாத நாயக்கருக்கும், டச்சுக்காரர்களுக்கும் நல்ல தொடர்பு இருந்து வந்திருக்கிறது. டேனிய கிழக்கிந்தியக் கம்பெனியின் உதயத்துக்கும் இரகுநாதர் உதவியிருக்கிறார். ரோலண்ட் கிரேப் என்பவரின் தலைமையில் 'ஓரியண்ட்' கப்பல் சோழ மண்டல கடற்பகுதியை அடைந்தபோது, போர்ச்சுகீசியர் தாக்கவே, ரோலண்ட் கிரேப் இரகுநாத நாயக்கரிடம் சரண் புகுந்தார். அதன் பிறகு தரங்கம்பாடியில் டேனிஷ் பர்க் கோட்டையை அமைக்கவும் அனுமதி அளித்திருக்கிறார் இரகுநாத நாயக்கர்.

இரகுநாத நாயக்கருக்கும் டேனியருக்கும் இருந்த நட்பை விளக்கும் பொன்னாலான கடிதம், 'ஸ்ரீரகுநாத' என்ற கையொப்பத்துடன்





கோபன்ஹேகன் நகரின் அரசு ஆவணக் காப்பகத்தில் பாதுகாக்கப்படுகிறது.

இரகுநாத நாயக்கரின் ஆன்மிக மற்றும் கலைத்துறைச் சாதனையான கும்பகோணம் இராமசாமி கோயிலிலும், நம் தஞ்சை தொப்பி நண்பரை ஒத்த உருவம் காணப்படுகிறது.

எனவே, என் சிற்றறிவுக்கு எட்டியவரை, தொப்பி நண்பர் ரோலண்ட் கிரேப்பாகவே இருக்க வேண்டும்.

க. மேனகா
(சீதாலட்சுமி இராமசுவாமி கல்லூரி, திருச்சி)



• ஏ.கே. மாத்தூர்






• 210 மெகாவாட் கொதிகலன் உருளை

# திரும்ப அழைத்த காமராஜர்!

திருச்சி பாய்லர் தொழிற்சாலையை இன்று உலகமே அறியும். முப்பத்து மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து லாபம் காணும் அரசுத்துறை நிறுவனம்.

ஆனால், காமராஜர் இல்லை என்றால், திருச்சி பி.எச்.ஈ.எல். இல்லை என்பதை எத்தனை பேர் அறிவார்கள்? அத்தொழிற்சாலையை அமைக்க தமிழ் நாட்டில் இடம்தேடி வந்த ஆய்வுக் குழு, 'பொருத்தமான இடம் ஏதும் இல்லை' என்று அறிவித்துவிட்டுத் திரும்பிப் போய்விட்டது. குழுவைத் திரும்பவும் வரவழைத்தார், முதல்வர் காமராஜர். 'திருவெறும்பூர் போய்ப் பாருங்கள்' என்றார்.

போனார்கள், பார்த்தார்கள், பி.எச்.ஈ.எல். பாய்லர் தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. இன்று லிபியா, எகிப்து, மலேஷியா, சைப்ரஸ், சீனா, இந்தோனேஷியா என்று பல்வேறு நாடுகளுக்குக் கொதிகலன்கள் இங்கிருந்து

# பெருமை சேர்க்கும் பாய்லர் தொழிற்சாலை!

ஏற்றுமதி ஆகின்றன. மலேஷியாவில் மின் உற்பத்திக்கும் பயனாகும் மின் உலைகளுள் எழுபது சதவிகிதம் திருச்சி பி.எச்.ஈ.எல். தயாரிப்புத்தான்.

இந்திய மின் உற்பத்தி நிலையங்களுக்கேற்ற பாய்லர்களும் டர்பைன்களும் கூட பிரத்யேகமாய் வடிவமைக்கப்பட்டுத் தயாரிக்கப்படுகின்றன திருவெறும்பூரில். நம் நாட்டு நிலக்கரியில் சாம்பல் சத்து அதிகம். அதைத் திறம்பட எரித்தால்தான் அதிக விரயமின்றி மின்சக்தியைப் பெற முடியும். இதைச் செய்வதற்கு ஏற்ற பாய்லர்கள், டர்பைன்கள், ஜெனரேட்டர்கள் யாவையுமே திருச்சி பி.எச்.ஈ.எல் பொறியாளர்கள் பிரத்யேகமாய் வடிவமைத்துள்ளார்கள்.

இந்தியாவின் முதல் அணு உலைக்கான நீராவி உற்பத்திக் கலன், அணுமின் நிலையங்களில் 235 மற்றும் 500 மெகாவாட் உற்பத்திக்கான கொதிகலன்கள், என்று உற்பத்திச் சாதனை இங்கே தொடர்கிறது. ஐ.எஸ்.ஓ. 9001 என்ற தரச்சான்றிதழும் சுற்றுச் சூழல் பாதுகாப்புக்கு ஐ.எஸ்.ஓ. 14000 சான்றிதழும் ஊழியர் நலன் காப்பதற்கு ஐ.எஸ்.ஓ. 18000 சான்றிதழும் பெற்றுள்ளது பி.எச்.ஈ.எல்.

திருச்சி பி.எச்.ஈ.எல். மேலாண்மை இயக்குனர், ஏ.கே. மாத்தூர், "தொழில் நுட்பத் திறன், நம்பகத் தன்மை, ஆற்றல் மிக்க ஆராய்ச்சிப் பிரிவின் பலம், விற்ற பிறகும் வழங்கும் வாடிக்கையாளர் சேவை" என வெற்றிக்குப் பல காரணங்களைப் பட்டியலிடுகிறார்.

பி.எச்.ஈ.எல். நிறுவனத்தின் பல தொழிற்சாலைகளுள் திருச்சி தொழிற்சாலை முதலிடம் வகிக்கிறது. அயல் நாட்டு ஆர்டர் வந்தால், 'ஆச்சா போச்சா' என்று தாமதமின்றியும் தரமாகவும் முடித்துத் தருவது ஒரு பக்கம் இருக்க, ஆர்டர் தந்தவர்களை அழைத்து, உற்பத்தியான இயந்திரக்கலனைப் பார்வையிடச் செய்து, அவர்கள் திருப்தி அறிந்த பிறகே தொழிற்சாலையைவிட்டு வெளியே அனுப்புகிறார்கள். இதற்குப் பச்சைக்கொடி அசைத்து ஒரு விழாவும் எடுக்கிறார்கள்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

• தொழிற்சாலை உள்ளே...

நீலகண்ட ஐயரின் நினைவு வருகிறது.

உப்பிட்டவரை உள்ளளவும் நினை... ஒப்புக்காகவா சொன்னார்கள்?

ஹாஸ்டலில் சேர்ந்த புதிதில் என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு 'சவலை' என்று முணுமுணுத்தார். சரிதான். வருஷக் கணக்கில் வடித்துப் போடும் தலைமைச் சமையல்காரர். அவர் பார்க்காத மாணவர்களா?

அது கரிசனத்தின் எதிரொலி என்பது போகப் போகப் புரிந்தது.





# விடுதி

சில்லென்று காவிரிக் காற்று முகத்தை வருடும் காலை நேரத்தில் ஆவி பறக்கும் காபி. எட்டு மணிக்குப் பலகார வேளை. மெனு மாறி மாறி வரும். அம்மி, ஆட்டுக்கல் காலம். எல்லாம் கைப்பக்குவ பாகம்.. ஆளுக்கு மூன்று இட்லி. அதுவே அதிகம் போல் தோன்றும். சைஸ் அப்படி... சாம்பார், தேங்காய்ச் சட்னியுடன் சாப்பிட்டு விட்டு வகுப்புக்குச் செல்லும் போது வயிறு கனத்திருக்கும்.

அடுத்த நாள் தோசை. இரண்டே தோசைதான். பெரிய தாமரை இலை அளவுக்கு இருக்கும். தேங்காய்ச் சட்னி, சாம்பாருடன் எண்ணெய் மிளகாய்ப் பொடி உண்டு.

இன்னொரு நாள் பொங்கல் வடை.. இடையிடையே அடை. எப்போதாவது பூரி கிழங்கு...

மத்தியான சாப்பாட்டு நேரம் சந்தடியாக இருக்கும். ஒரு மணி நேரத்திற்குள் மொத்த ஹாஸ்டல் மாணவர்களும் சாம்பார், ரசம், மோர் சாதத்தை உருட்டியும் உறிஞ்சியும் தள்ளிவிட்டு, ஓட்டமும் நடையுமாக வகுப்புக்குச் செல்வது பார்க்க வேண்டிய காட்சி.

இரவு சாப்பாடுவரை எதையும் சூடு பறக்கத் தரும் உயர்ந்த மனிதர் நீலகண்டன், உயரத்தைப் போலவே. காவிரி படித்துறை அரச மரத்தில் பாதி உயரம் இருப்பார். எப்போதாவது டவுனுக்குப் போகும் சந்தர்ப்பங்களில் சட்டையோடு பார்க்கலாம்.

படித்துறைப் பழக்கம் பாசமாகப் பரிணமித்தது. சாயந்திரம் வரை பாடப் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருக்கும் இடம் அது. சமையலை முடித்துவிட்டு அவரும் அங்குதான் காற்றாட வருவார்.



"கோடி குடுத்தாலும் இந்தச் சுகம் கிடைக்காது. இந்தக் காவேரிக் கரை வாசத்தை ஜன்மத்துக்கும் மறக்க முடியாது. ஒரு காலத்துல வெள்ளைக்காரங்க படிப்பிச்ச காலேஜ். நல்லாப் படிக்கணும். கொஞ்சம் சதையும் பிடிக்கணும். அதுவரைக்கும் சவலைன்னு தான் கூப்பிடப் போறேன்.."

காவிரியில் எதிர் நீச்சலடித்ததை ஒரு நாள் பார்த்துவிட்டு பதறிப் போனார்.

"ரொம்ப பயங்கரமான சுழி... இதுக்கு அந்தண்டை போனா ஆபத்து.... ஆள் இல்லாத நேரத்தில் விஷப்பரீட்சை கூடாது.."

கரைக்கு வந்ததும் ஆறுதலாகப் பார்த்தார். அது ஒத்திகை என்பது அவருக்குத் தெரியாது.

காவிரியில் நீந்திக் கரையைக் கடந்தால் தான் கல்லூரிப் படகுச் சங்கத்தில் சேர முடியும்.

முடிந்தது.

மறு வாரம் நாலு மாணவர்களில் ஒருவனாக உட்கார்ந்து நீரோட்டத்தை எதிர்த்து துடுப்புப் போட்டதை, ஹாஸ்டல் படித்துறையில் இருந்தபடி பார்த்து அசந்து போனார் அவர்.

"கவலை விட்டது. இனி சவலை இல்லை... பலசாலி!"

நீலகண்டன் சிரித்தபடி சொன்னார்.

"சவலைன்னே நீங்க கூப்பிடலாம். பொருத்தமாத் தானே இருக்கு"

"காவேரில எதிர்நீச்சல் போடற துணிச்சல் இருக்கே!"

"துணிச்சல் அல்ல. முயற்சி தான். ஆசீர்வதிங்க."

"அது எப்பவும் உண்டு சவலை யாண்டானுக்கு!"

எதிர்நீச்சல் பழகிப் போனதுதான்.

ஆற்றில் மட்டுமா? வீட்டிலும், படிக்கும் இடத்திலும் அப்படித்தான். வெறுங்கை முழம் போடாது. மேல்படிப்புக்கு ஆசைப் படுவது வெட்டித்தனம் என்ற வழிமறிப்பு.

'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார். கல்லூரிக்குப் போடடா மனு.."

உத்வேகம் பிடரியைப் பிடித்துத் தள்ளியது.

"மாசப் பணம் முப்பது ரூபா ஆகலாம். மொத்தச் செலவை ஹாஸ்டல் பிள்ளைங்க பகிர்ந்து கட்டற முறை— இருபத்தேழு ரூபா கூட வரும்— வசதி குறைஞ்ச கெட்டிக்காரப் பசங்களுக்கு ஸ்காலர்ஷிப் கிடைக்கலாம்.."

சேர்ந்த புதிதில் வார்டன் சொன்னார்.

கிடைத்தது.

பாலத்துக்குக் கீழ் காவிரியைக் கூறு போட்டுக் கொண்டு நாலு பேர் அல்லது ஆறு பேர் படகில் முன்னேறும் போது அநாயாச வேகதாகம்.

ஹாஸ்டல் படித்துறையை படகு கடக்கும் போது அநேகமாக நீலகண்ட ஐயர் அங்கு நிற்பார்.

"இனிமே சவலைன்னு கூப்பிடறது தப்பு.

▪ ஜே.எம். சாலி ▪

பயில்வான்னு சொல்லட்டுமா?''

"கேலியா? ஊட்டி வளர்க்கிற உங்க முன்னாடி நான் எப்பவும் சவலை தான்... "

சந்தோஷம் தமக்குத் தான் என்று அவர் சொல்லிக்காட்டும் சில சந்தர்ப்பங்கள்.... ஹாஸ்டல் தினக் கொண்டாட்டத்தில் பரிசுகள். கல்லூரி விழாக்களிலும் அப்படித்தான்.

"எல்லாம் எனக்குக் கிடைச்ச மாதிரி பெருமையா இருக்கு'' என்பார். நாலு வருஷம் ஓடிய வேகம் தெரியவில்லை.

கண்ணைக் கசக்கிக் கொண்டார்.

"எதுக்காக இதெல்லாம்...?''

ஆனந்தக் கண்ணீர் என்றார்.

"பிள்ளையைப் பிரிகிற ஏக்கம். சமத்துப் பிள்ளையை சவலைன்னு நாலு வருஷம் கூப்பிட்டேனே... சங்கடப்படுது மனசு. ரேங்க் எடுத்து ஃபர்ஸ்ட் கிளாஸ்ல பாஸ் பண்ணின பிள்ளைக்கு என்னத்தைக் குடுக்கப் போறேன்...?''

"அன்பு... ஆசிர்வாதம். அதுக்கு மேலே என்ன வேணும்?''

"அடிக்கடி இனிமே பாக்க முடியாதுங்கிற பாரம்..''

''பாரம் இல்லே. அது தான் பாசம். சவலையா எப்பவும் உங்க மனசில இருப்பேன். நினைக்கிறப்ப சந்தோஷம் வரும். கவலை ஓடிப்போகும்...''

"இன்னும் படிச்சு பெயர் எடுக்கணும்...''

''ஆசிர்வதித்து அனுப்பினார் நீலகண்டன்.

ஸ்ரீனிவாச ராவ் நிழலாடுகிறார்.

இவர் சில நேரங்களில் திறந்த மேனிக்காரர். மேல் துண்டு உண்டு. அரைக்கைச் சட்டையுடன் அவ்வப்போது பார்க்கலாம். நீலகண்ட ஐயரின் நிறம் அல்ல. அவரைப் போல் குரல் இல்லை. அளவான பேச்சு. பரிமாறல் தாராளம்.

"ரொம்பவும் சாந்தம். அளவுக்கு மீறின அடக்கம்... கூச்சப்படாம கேட்டு வாங்கிச் சாப்பிடுங்க...''

அன்னாசி ரசத்தை வார்த்தபடி ராவ் சொன்ன காட்சி கண்ணில் நிற்கிறது.

பட்டணப் படிப்பெல்லாம் பகல் கனவு என்ற வழிமறிப்பை மீறி வந்து சேர்ந்த இடம்.

ஒரு பட்டம் போதும். கிடைக்கிற வேலையைப் பார்... ஒத்துப் பாடினார்கள்.

எதிர்நீச்சல் பழகிப் போனதுதானே! தன்னிச்சையாக கல்லூரிக்கு அனுப்பிய விண்ணப்பத்துக்குச் சாதகமான பதில் வந்தது.

கடலைப் பார்த்தபடி கல்லூரியும் ஹாஸ்டலும்.

ஒரு மாதத்தில் சூழ்நிலை பழகிவிட்டது.

முதல் மாத ஹாஸ்டல் பீஸ் அறுபது ரூபாய் கையில் இருந்ததால் கவலை இல்லை.

மூன்றாவது மாத முதல் வாரம். கிராமத்திலிருந்து காரசாரமான கடிதம்.

'படித்துக் கிழித்தது போதும். மூட்டையைக் கட்டிக் கொண்டு ஊரைப் பார்க்க வந்து சேர். ஹாஸ்டல் கடிதம் உள்ளது. பார்த்துக் கொள்!'

'உங்கள் பிள்ளை பீஸ் கட்டவில்லை. உடனடியாக உரிய ஏற்பாட்டைச் செய்யுங்கள்..'

சுருக்கமான வாசகங்கள்.. ஜீரணிக்கத் தான் கஷ்டமாக இருந்தது.

ஐம்பது நூறு கூட கையில் இல்லாமல் அதிகம் படிக்க ஆசைப்பட்டால் அனுபவிக்க வேண்டியது தான்... அது தார்மிகம். முறையிட நியாயம் இல்லை.

ஓசைப்படாமல் வெளியேறுவதே நாகரிகம். ஒரு பட்டம் இருக்கிறது. அதற்கு ஒரு வேலை கிடைக்காமலா போய்விடும். ஒரு நூற்றைம்பது இருநூறு கிடைக்காதா?



"எதிர்வீட்டு மல்லிகாவிடம் இந்த லெட்டரைக் கொடுத்துடு.. பத்து ரூபாய் தர்றேன்...''

''நடக்காது! 'அந்த கழுதை மூஞ்சி லெட்டர் எதுவும் கொடுத்தா வாங்காதே'ன்னு சொல்லி மல்லிகா எனக்கு நூறு ரூபாய் கொடுத்திருக்கா!''

- உ. ராஜாஜி





"அங்கே வித்தியாசமான பட்டிமன்றம் நடக்குதா – என்ன தலைப்பு?"

"முதல்வருக்கு அதிகம் துணைபுரிவது பொடாவா? புல்டோசரா?"

- தஞ்சை தாமு



அறை வாசலில் காலடியோசை. அட்டெண்டர் அருணாசலத்தின் குரல்...

"உங்களைப் பாக்கணுமாம்... ரிஷப்சன்லே ஒருத்தங்க..."

"யாருன்னு சொல்லலையா?"

வரவேற்புப் பகுதியில் வஞ்சனையில்லாத புன்னகையுடன் ப்ரிய சகி...

"ஆச்சரியமா இருக்கா மனு?"

"ஆமாம். உக்காருங்க, சகி..."

"இந்த ஹாஸ்டல்ல இருக்கேன்னு எப்படித் தெரியும்?"

"ஜாதகம் கையிலே இருக்கிறப்ப வராம இருக்கவா முடியும்?"

புரியவில்லை.

"தாங்க முடியாத சந்தோஷம்... பாத்தே ஆகணும்னு வேலையிடத்திலேருந்து நேரா வர்றேன்..." சகிக்கு கரை புரளும் உற்சாகம்....

பள்ளியிலும் கல்லூரி ஆரம்ப நாட்களிலும் பழக்கம். பட்டப் படிப்பை முடிக்காமல் வேலை தேடிக் கொண்டு விட்டாள் என்பது மட்டும் தெரியும். பக்கத்து ஊர்வாசிகள்.

"ஹாஸ்டல் வாழ்க்கையிலேயே காலம் ஓடிக்கிட்டிருக்கு இல்லியா?"

"அதுக்கு முடிவு வந்தாச்சு..."

"வர முடியாது மனு. இன்னும் இரண்டு வருஷத்துக்கு இங்க தான் தங்கப் போறீங்க. படிச்சு முடிக்கப் போறீங்க...!"

"வழி இல்லை... அடைபட்டுப் போச்சு!"

"இருக்கு. அதைச் சொல்லத்தான் வந்திருக்கேன்..."

பெரிய மின்னல் வெட்டு!

நல்ல செய்தியைச் சொல்லி நம்பிக்கை ஏணியில் உயர்த்தி விட்டாள். ஸ்காலர்ஷிப் கிடைத்திருப்பதாகச் சொன்னாள். அந்த அலுவலகத்தில் சகி வேலை பார்ப்பது அதுவரை தெரியாத விஷயம்.

மறு நாள் ஹாஸ்டல் அலுவலகத்தி லிருந்து அழைப்பு.

"எண்ணூறு ரூபாய் ஸ்காலர்ஷிப் கிடைச்சுருக்கு. இனி ஹாஸ்டல் பீஸ் கட்டத் தேவையில்லை" அக்கவுண்டன்ட் சொன்னார்.

மூட்டை கட்டும் அவசியம் இல்லை.

சமய சஞ்சீவியாக சகி வந்திராவிட்டால் தலைகீழாக அப்படி ஏதாவது நிகழ்ந்திருக்கும்.

தேடி வந்து தகவல் தந்த சகிக்கு நன்றி சொல்லும் கடமை இருந்தது.

அவள் வீடு தேடிச் சென்ற ஒரு ஞாயிற்றுக் கிழமை மாலைப் பொழுதை, பண்டிகை தினமாக மாற்றி விட்டார்கள் மகளும் தாயும்.

இரண்டு வருஷ ஹாஸ்டல் வாசத்துக்கு இடையே அடிக்கடி சகியின் சந்திப்பு, உபசரிப்பு, உற்சாகமான உரையாடல்கள்.

"படிப்பு முடியப் போகுது. என்ன செய்ய உத்தேசம், மனு?" தாய் கேட்டாலும் அது சகியின் கேள்வியாகவே தொனித்து ரீங்காரம் எழுப்பியது.

"நம்ம கையில என்ன இருக்கு?"

"என்ன இல்லை? எல்லாம் இருக்கு உங்க கையிலே. கிளாஸ் எடுப்பீங்க... ராங்க் கிடைக்கும். பிறகு..."

"ஏன் நிறுத்திட்டே சகி..?"

சகி தொடரவில்லை. அம்மா தொடர்ந்தாள்.

"சரி... கல்யாணம் காட்சியைப் பத்தி யோசிக்கலையா?"

"இப்ப எதுக்கு அந்த யோசனை? முதல்ல ஒரு வேலையைத் தேடிக்கிட்டு மத்த வேலையைப் பாருன்னுதான் வீட்ல சொல்லுவாங்க... அது தான் முறை. நியாயம்..."

"சகியைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?"

"உங்க பெண்ணாச்சே. உங்களைப் போலவே தங்கம்..."

"அந்தத் தங்கத்துக்கு வயசாகிக்கிட்டிருக்கே... காலாகாலத்தில்..."

நல்ல சங்கதி தான். சாதகமான ஜாதகமாக சகியின் கையில் வேலை இருக்கிறது. சீக்கிரமே கல்யாண மாலை கழுத்தில் விழும்...

சொல்ல வேண்டும் போல் இருந்தது. வயது போதாது என்ற தன்னடக்கம்.

பேசத் தோன்றவில்லை.

பரீட்சை எழுதி முடிக்கும் வரை பல முறை சந்திப்புகள்.



## தாட்... பூட்... ஜூட்!

**கா**தல் படங்களே கதி என்று கிடந்த ஸ்ரீகாந்த்துக்கு, 'ஜூட்' படத்தில் அதிரடி ப்ரமோஷன் கிடைத்துள்ளது. தாட்பூட் ஆக்ஷன் ஹீரோவாகக் கலக்குகிறாராம்!

அப்ப மீரா ஜாஸ்மினுடன் காதல் டூயட்? அது பாட்டுக்கு சைடுலே ஓடுமாம்!

- ஸ்ரீ

அழைப்பை ஏற்று ஹாஸ்டல் தினக் கொண்டாட்டத்துக்கு இருவரும் வந்தார்கள்.

சிறந்த மாணவனுக்கான பாராட்டுகள், பரிசுகள், கைத் தட்டல்கள்.

விருந்தினராக வந்த சகியும் தாயாரும் மகிழ்ந்து நெகிழ்ந்து போனார்கள்.

பிறகு ஒரு நாள் பிரியாவிடை.

"மறந்திட மாட்டீங்களே மனு?"

சகியை மறக்கவா முடியும்?

**த**னாவின் நினைவு சுடுகிறது.

"நீங்க பட்டதாரியா இருக்கலாம். பதவியில இருக்கலாம்... மத்தவங்க பாராட்டலாம்... ஆனா... நான்...!"

அப்படித்தான் ஆரம்பித்தாள்.

வித்தியாசமான தோற்றம். பார்க்கத் தூண்டும் வசீகரம். ஒரு ராஜகுமாரி என்று வர்ணிக்கலாமா?

"விடுதியில தங்கி படிச்சிருக்கிறீங்க... எங்க வீடு அப்படி இல்லே... சத்திரம் சாவடி அல்ல... இது அரண்மனை மாதிரி. ஜமீன் குடும்பம்னு கேள்விப்பட்டிருப்பீங்க..."

"அதனாலே..?"

"அவசரத்தில் நடந்து போன விபத்து... அப்படித்தான் நினைக்கிறேன்... ஆனா இதுக்கு மேல எதுவும் நடக்கப் போறதில்லே."

நிச்சயிக்கப்பட்ட பெண் பேசுகிற பேச்சா இது? அதுவும் கல்யாண நாள் நெருங்கிக் கொண்டிருக்கும் நேரத்தில்!

"பட்டம் பதவின்னு பெரிசா நினைச்சு அம்மா அப்பா அவசரப்பட்டுட்டாங்க... உங்க குடும்பத்துக்காரங்க சுத்திச் சுத்தி வந்து ஒத்தைக்கால்லே தவம் இருந்தாங்களாம். எதுக்கு? சம்பத்து, சுகம், ஐஸ்வர்ய ஆசை, இல்லையா? அப்பா ஏமாந்துட்டார். படிப்பை முடிச்சிட்டு நான் திரும்பறதுக்குள்ள எல்லாமே தறிகெட்டுப் போச்சு... தவறு நடந்துட்டது..."

"அப்ப இந்த சம்பந்தம்.... நடக்க வேண்டிய கல்யாண பந்தம்?"

"நீங்க வேற வழியைப் பாத்துக்கலாம்... அடுத்த விடுதியை ஏற்பாடு செய்துக்கலாம். எதுக்கும் பொருத்தம் இருக்கணும். இல்லையா?"

முடிச்சு விழுமுன்பே முறித்துக் கொண்டாள்.

**ஒ**ன்றா, இரண்டா? இன்று வரை விடுதி தான்.

உத்தியோகம் முடிந்து ஓய்வு.

தனிமை... முதுமை... தவிப்பு, தளர்வு, மெலிவு.

"நினைவு மழுங்குது, இல்லியா? டிமன்ஷியா தான். அப்பப்ப செக்-அப்புக்கு வாங்க."

டாக்டர் சொல்கிறார்.

நினைவு மழுங்கலா? இல்லை... மழுங்காது.

நீலகண்டம், சீனிவாச ராவ், சகி... சகாக்கள்...தனா... யாரை மறக்க முடியும்?

இல்லை... மழுங்காது.

ம்....எத்தனை விடுதிகள்!

இன்னும் ஒன்றே ஒன்று...

கதவுகளைத் தட்டித் தட்டி கை ஓய்ந்த மாதிரி இருக்கிறது.

# வட்டமேஜை

# ஜாங்கிரி குலோப்ஜாமூன் பாதாம் பால்!

✉ இரண்டு புத்தகங்கள், புதிய பகுதிகள், எண்ணற்ற இனிய செய்திகள், தீபாவளியின் மகிழ்ச்சியை முன்கூட்டியே கொண்டாடிவிட்ட உணர்வே மேலிட்டது! பீரிட்டது!

கும்பகோணம், எஸ்.கே.மூர்த்தி

✉ வாசகியரின் 'கடைத் தெரு கலாட்டா' ஒவ்வொன்றும் கலகலவெனச் சிரிக்க வைத்தது.

பூனாம்பாளையம், ஷோபியாப்ரியன்







✉ 'லேட்டஸ்டா வருவேன்'னு விஜய் சொன்னதைக் கேட்டு என்னவோ நீங்களும் ஆசையாய்ப் போக, கடைசியில் வழிந்தது என்னவோ நாங்களும்தான்!

திருநெல்வேலி, எஸ்.ஆர். ஸ்வாமி

✉ ஒவ்வொரு சராசரி இந்தியனின் மனத்திலும் உள்ள விஷயங்களை அப்படியே படம் போட்டுக் குமுறித் தள்ளிய தலையங்கம் சூப்பர்.

திருநெல்வேலி, நெல்லை எஸ்ஸார்

✉ 'ஒரு தீவிர தீபாவளி ரிலீஸ்' படித்துச் சிரித்தேன். கமலுக்கும் பிடித்திருக்கும்.

நங்கநல்லூர், வே. லட்சுமி

✉ ரொம்ப நாளைக்கு அப்புறம் ஆனந்தி எழுதும் பக்தித் தொடரை வாசிக்க இந்த 'தெய்வத் தமிழ் நாட்டினிலே நாமும் பிறந்திருக்கின்றோமே' என உள்ளம் பூரித்தேன்.

சென்னை, மஞ்சுளா பாய்

✉ தீபாவளி பர்ச்சேஸ் ஏற்கெனவே முடித்து விட்டாலும், 'ஷாப்பிங் ஸ்பெஷல்' படித்து விட்டு மீண்டும் ஒருமுறை ஷாப்பிங் செய்தேன். ஆகா... என்ன ஆனந்தம்!

சென்னை, என். சுஜாதா

✉ தீபாவளி ஜாங்கிரி விஜய் அட்டை. குலோப் ஜாமூன் அர்ச்சனா அட்டை. பாதாம் பால் செம்பியனின் தொடர். பலே பூஃபே விருந்து!

ஈரோடு, ரேவதி ப்ரியன்

✉ 'பீஷ்மர் பட விமர்சனம் மிகவும் நியாயமாக எழுதப்பட்டிருந்தது. பரீட்சைப் பேப்பரில் எல்லாவற்றையும் 'டிக்' செய்து விட்டு முடிவில் மார்க்கைக் குறைத்தது போலிருந்தது தாங்கள் கொடுத்துள்ள ரேங்க்.

திருவாரூர், த.பரதன்

✉ 'நேற்று... இன்று... நாளை...' - புதிய பகுதி அருமை! துணிச்சல் என்பது கல்கிக்கு மட்டுமே உரியது என்பதற்கு, புள்ளி ராஜாவைக் கிள்ளியதே அத்தாட்சி.

சேலம், அ. சின்னசாமி

## குழி தோண்டிப் புதைக்கலாமா?

சமீபத்தில் சென்னை பெசன்ட் நகரில் உள்ள மின் எரியூட்டு வளாகத்திலுள்ள திறந்த வெளி எரியூட்டும் இடத்தில், என் உறவினர் ஒருவரின் சடலத்திற்கு ஈமச் சடங்குகள் நடந்து கொண்டிருந்தன. அவற்றை நடத்திக் கொண்டிருந்த இரண்டு புரோகிதர்களில்

# வாசகர் குமறல்

ஒருவர், செல்ஃபோனில் வேறு ஒருவருடன் அவருடைய அழைப்புக்கு விபரமாக பலத்த குரலில் பேசி முடித்தார். அவருக்கு இறந்தவருடைய உற்றார் உறவினரின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளும் பண்பு சற்றும் இல்லாததைக் கண்டு மிகவும் நொந்து கோபமடைந்த போதிலும், அவரைக் கடிந்து கொள்ள அந்த இடமும் நேரமும் சரியானதல்ல, என்று சும்மா இருந்து விட்டேன். புரோகிதர்கள் தொழிலுக்கு இழுக்கு வருமாறு செய்யும் காரியங்கள், மத நம்பிக்கையைக் குழி தோண்டிப் புதைத்து விடும் என்பதை மனத்திலிருத்திக் கொண்டு செயல்படுவார்களா?

- என்.கே. சூரியநாராயணன், பெங்களூர்



## நீ, நான், அவலம்!

விஜய் டீ.வியில் (14.10.2003) 'நீ நான் அவன்' என்கிற தொடர் நிகழ்ச்சியில் ஓர் அருவெறுப்பான காட்சியைப் பார்த்தேன்.

கணவன் தூக்குப் போட்டுக் கொண்டு இறக்கிறான். அவன் மனைவிக்கு அலங்காரம் நடக்கிறது. பல பெண்கள் இதில் கலந்து கொள்கிறார்கள். விதவைக்குப் பொட்டு இடப்படுகிறது. தலை வாரி விடப்படுகிறது. மலர் சூட்டப்படுகிறது. எண்ணற்ற வளையல்கள் அணிவிக்கப்படுகின்றன. பிறகு சுற்றியுள்ளவர்களில் இருவர் ஆரத்தி எடுக்கிறார்கள். எல்லோரும் கலைகிறார்கள். அடுத்த நொடி மறைந்த பெண்கள் திரும்பிவருகிறார்கள். விதவையின் பொட்டு அழிக்கப்படுகிறது. பூக்கள் எடுக்கப்படுகின்றன. வளையல்கள் நொறுக்கப்படுகின்றன. பெண்கள் அடித்துக் கொண்டு அழுகிறார்கள்.

இந்த 'தத்ரூப'மான காட்சி சுமார் பத்து நிமிடங்கள் காட்டப் படுகிறது. நாம் 2003-ல் வாழ்கிறோமா, அல்லது 1920-லா என்கிற சந்தேகம் ஏற்படுகிறது. இத்தகைய அசிங்கமான, ரஸாபாஸமான காட்சிகள் தேவையா, என இந்த 'அழுகை'த் தொடரின் இயக்குனர் சிந்திப்பாரா?

- பி.எஸ். இராமமூர்த்தி, சென்னை - 84



# நமக்கே உரிமையாம் -2

அரசியல் சாசனத்தின் மூன்றாம் பாகம் அடிப்படை உரிமைகளைத் (fundamental rights) தொகுத்தளிக்கிறது. 19வது பிரிவு எப்படித் தொடங்குகிறது என்பதைப் பார்ப்போம்.

19(1) ஒவ்வொரு குடிமகனுக்கும் கீழ்க் கண்ட உரிமைகள் உண்டு :

(அ) பேச்சுரிமையும் எண்ணங்களை வெளிப்படுத்தும் உரிமையும்.

'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு' என்று கூறும் போதும், சுதந்திரத்தில் உள்ள பேச்சுரிமையைத் தான் வலியுறுத்துகிறோம். பேச்சு இல்லாவிட்டால் சுதந்திரம் கிடை யாது. ஜனநாயகம் கிடையாது. பேச்சு, விவா தம், கருத்து மாறுபாடு ஆகியவற்றை ஒரு ஜனநாயக நாட்டில் தவிர்க்க முடியாது. தவிர்க்க முடியாது என்பது மட்டுமல்ல, அவற்றைத் தடுக்கவும் கூடாது.

எங்கே பேசுவது, யார் பேசுவது என்ற கேள்விகள் எழுவது இயல்பே. நம் விடு களில், நான்கு பேர் கூடும் இடங்களில், சந்தையில், சாவடியில், எங்கெல்லாம் மௌனம் அல்லது அமைதி கடைப்பிடிக்க வேண்டிய அவசியம் இல்லையோ, அங் கெல்லாம் பேசலாம்.

பல நூற்றாண்டுகளுக்குமுன் ஏதென்ஸ், ரோம் போன்ற நகரங்கள் தனி நாடுகளாக (city state) விளங்கின. அந்த நகரங்களின் மையப் பகுதியைச் சதுக்கம் (square) என் றழைத்தார்கள். அந்தச் சதுக்கங்களில் விவா தம் நடந்தது. அடிமைகளைத் தவிர யார் விரும்பினாலும் பேசலாம். நம்முடைய கிராமங்களில் இது போன்று ஓர் இடம் இருக்கிறது. அது சாவடி அல்லது சவக்கை என்று அழைக்கப்படுகிறது.

இந்தியாவில் நூற்றியொரு கோடி மக்கள் இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் ஆறேகால் கோடி மக்கள். எல்லோரும் எந்தச் சதுக்கத் தில் கூடிப் பேசுவது - அது இயலாத காரியம். ஆகவே, ஜனநாயகம் என்பது பிரதிநிதித்துவ ஜனநாயகமாக (Representative Democracy) பரி ணாமமடைந்தது. நம்முடைய ஜனநாயகத் தின் 'சதுக்கம்' சட்டமன்றம். இந்தச் சதுக் கத்தில் நம்முடைய பிரதிநிதிகள் சுதந்திர மாகப் பேச வேண்டும், விவாதிக்க வேண் டும், கருத்து மாறுபட வேண்டும்.

நம்முடைய பிரதிநிதிகளாகத் தேர்ந் தெடுக்கப்படாதவர்களுக்கும் பேச்சுரிமை உண்டு. அவர்கள் பேசுவதற்கும் விவாதிப் பதற்கும் பொதுவான இடங்கள் வேண்டும். அவர்களுக்குரிய 'சதுக்கம்' பொதுக் கூட்ட மேடை.



லண்டனில் ஹைட் பார்க் என்றொரு விரிந்த பூங்கா இருக் கிறது. அந்தப் பூங்காவில் ஒரு குறிப் பிட்ட இடத்திற்குப் பெயர் ஸ்பீக் கர்ஸ் கார்னர், அதாவது பேச்சாளர் மூலை. ஞாயிற்றுக் கிழமை காலை பல வேடிக்கையான, விசித்திரமான காட்சிகளை அங்கே காணலாம். ஒரு மேஜை அல்லது நாற்காலி, அல்லது ஒரு மரப் பெட்டியில் ஏறி நின்று கொண்டு பேச்சாளர்கள் பேசுவார்கள். எதைப் பற்றியும் பேச லாம். யாரைப் பற்றியும் பேசலாம். அங்கே பேச்சுரிமைக்கு வரம்பே



**ப.சிதம்பரம்**

கிடையாது. (மரப் பெட்டிகளில் சோப் விற்ற காலம் இருந்தது. மரப் பெட்டியின் மீது நின்று பேசும் பேச்சாளர்களைப் போன்றவர் என்பதைக் குறிப்பிடும் வார்த்தைகள் தாம் (Soap box orator) என்ற வாசகம்.

ஜனநாயகத்திற்கு நெறிகள் அவசியம். ஜனநாயகம் தறிகெட்டு ஓட முடியாது. சட்டமன்றம் என்ற சதுக்கத்திலும், பொதுக் கூட்டம் என்ற சதுக்கத்திலும் வரம்பு மீறிப் பேசக் கூடாது என்பதை ஏற்றுக் கொள்கிறேன். பேச்சு, வரம்பை மீறக் கூடாது. அதே சமயம் வரம்பு பேச்சுரிமையை நெறித்துவிடக் கூடாது. பேச்சா, வரம்பா என்ற கேள்வி எழக் கூடாது. ஆனால் அத்தகைய கேள்வி அரிதாக எழுந்துவிட்டால், ஒரு ஜனநாயக நாட்டில் பேச்சுரிமைக்கே முன்னுரிமை அளிக்க வேண்டும். அது போன்ற சமயங்களில், வரம்பு மீறிய பேச்சென்றாலும் அதனைச் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும். நம் காதுகளைப் பொத்திக் கொள்ளலாம். அல்லது அந்த இடத்திலிருந்து வெளியேறிவிடலாம்.

சட்டமன்றம் என்ற சதுக்கத்தில் பேச்சை அனுமதித்து வரம்பை நிலைநாட்டும் இடத்தில் ஒருவர் இருக்கிறார். அவர்தான் ஸ்பீக்




# சதுக்கங்களைக் காப்பாற்றுவோம்!

கர், அதாவது சபாநாயகர் அல்லது பேரவைத் தலைவர். இங்கிலாந்து, நாடாளுமன்றத்தின் ஸ்பீக்கர் பேசவே மாட்டார் என்று சொல்வார்கள். (The speaker of the British Parliament never speaks) பேரவைத் தலைவர் மிக அரிதாகவே பேச வேண்டும். சட்டமன்ற உறுப்பினர்கள் பேசுவதற்குத் தாராளமாக அனுமதியளிக்க வேண்டும். சுவையான விவாதம் நடைபெற, குறுக்கீடுகள் உட்பட, வாய்ப்பளிக்க வேண்டும். எதிர்க்கட்சி உறுப்பினர்கள் பேசுவதற்கும், ஆளும் கட்சியினரின் முடிவுகள் நிறைவேறுவதற்கும் களம் அமைத்துத் தர வேண்டும். 'The opposition will have its say and the ruling party will have its way' என்று அறிஞர்கள் கூறியதை வழிகாட்டும் நெறியாக ஒரு சபாநாயகர் கடைப்பிடிக்க வேண்டும்.

சட்டமன்றம் என்பது மூன்று தூண்களில் ஒன்று. சபாநாயகர் என்பவர் சட்டமன்றத்தின் இறையாண்மையின் சின்னம். சட்டமன்றத்தின் முன் / சபாநாயகரின் முன் / அரசு தலை வணங்க வேண்டுமேயன்றி, அரசு அல்லது அரசாட்சி செய்பவர்களின் தாள் பணிபவராக சபாநாயகர் இருக்கக் கூடாது. சபாநாயகரின் உயர்வை நிலை நாட்டுவதற்காக ஒரு மரபு ஏற்றுக் கொள்ளப்பட்டது. அந்த மரபின்படி, சபாநாயகர், தம் பதவிக் காலத்தில் தாம் சார்ந்திருக்கும் அரசியல் கட்சியிலிருந்து விலகியிருக்க வேண்டும்.

பொதுக் கூட்டம் என்பது ஜனநாயகத்தின் சதுக்கம் என்று குறிப்பிட்டேன். பொதுக் கூட்டத்தில் சபாநாயகர் கிடையாது. எனவே, அங்கே பேச்சுரிமை விரிவாகவே பயன்படுத்தப்படும், வரம்புகள் குறைவாகவே இருக்கும்.

இந்தியாவில் பல்வேறு மாநிலங்களில் உள்ள சட்டமன்ற நடவடிக்கைகளைப் பற்றி நீங்கள் படிக்கிறீர்கள், அவற்றைப் பார்க்கவும் செய்கிறீர்கள். தமிழ்நாடு சட்டமன்றம் எப்படிச் செயல்பட்டது. இப்பொழுது எப்படிச் செயல்படுகிறது என்பதைச் சிந்தியுங்கள். திரு சிவசண்முகம் பிள்ளை, திரு செல்லப் பாண்டியன், திரு பழனிவேல் ராஜன் போன்ற பெருமக்கள் தமிழ்நாடு சட்டப் பேரவையில் அவைத் தலைவராக வீற்றிருந்த காலமும் இருந்தது; 1972ஆம் ஆண்டில் ஒரே நேரத்தில் இரண்டு சபாநாயகர்கள் சட்டப் பேரவையை நடத்திய அவலமும் இருந்தது.

முதலமைச்சரைக் கண்டித்த சபாநாயகரும் இருந்திருக்கிறார். முதலமைச்சருக்குப் பரணி பாடும் சபாநாயகரும் இருக்கிறார்.

பொதுக் கூட்டமே அரசியலின் உயிர்த் துடிப்பாக இருந்த காலம் உண்டு. பால கங்காதர திலகர், சுப்பிரமணிய சிவா, தீரர் சத்தியமூர்த்தி, தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, இந்திரா காந்தி ஆகியோர் முழங்கிய இடம் தான் திலகர் திடல். திலகர் திடலின் அணிகலனாக விளங்கிய சீரணி அரங்கத்தின் அடையாளமே இருக்கக் கூடாது என்ற வகையில் அந்த வரலாற்றுக் குறிப்புகள் அழிக்கப்பட்டுள்ளன.

ஸ்பீக்கர் என்பவர் பேசமாட்டார் என்ற ஜனநாயக மரபும் இருக்கிறது. ஸ்பீக்கர் என்பவர் பேசாமல் இருக்கவே மாட்டார், சட்டமன்றத்தில் பேசுவார், அரசு விழாக்களில் பேசுவார், இலக்கியக் கூட்டங்களில் அரசியல் பேசுவார், செய்தியாளர்கள் மத்தியில் பேசுவார் என்ற புதிய மரபுகளும் உருவாகிக் கொண்டிருக்கின்றன.

பேச்சுரிமையைக் காப்பாற்றுவது இருக்கட்டும். ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதும் இருக்கட்டும். நம்முடைய ஜனநாயகத்தின் சதுக்கங்களை முதலில் காப்பாற்ற வேண்டாமா?

(தொடரும்)

படம் : **மீடியா ராமு**



"உன் மனைவியையும் அம்மாவையும் மன நோய் நிபுணரிடம் அழைச்சுக்கிட்டுப் போனியாமே! ஏண்டா?"

"கொஞ்ச நாளா அவங்க சண்டை போட்டுக்காம இருக்கவும் ஒரு மாதிரி சந்தேகம் வந்துடுச்சு!"

- உ. ராஜாஜி

# ‘நேருக்கு நேர்’ எந்த இடத்தில் கூடாது...?



● ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

? ‘கேரள மக்கள் ஒரு போதும் தங்கள் அரசியல் தலைவரைத் திரையரங்குகளில் தேட மாட்டார்கள்’ என்று கேரள சூப்பர் ஸ்டார் மோகன்லால் சொல்வது தமிழ் ரசிகர்களைக் கிண்டல் செய்வதுபோல் அல்லவா இருக்கிறது?

! அவர் சொல்வது கிண்டலோ இல்லையோ... உண்மை; இன்று வரை.





• மலரும்...

• ... மணமும்!

● ஆர். ராமசுப்ரமணியர், திருவாரூர்

? ‘போயஸ் தோட்டத்தை ‘லையர்ஸ் தோட்டம்’ எனக் குறிப்பிடுவதுதான் பொருத்தம்’ என்று மணி சங்கர் அய்யர் கூறியிருப்பது...?

! மீண்டும் ஒரு தரக் குறைவான விமர்சனம். இத்தகைய விமர்சனங்கள் ம.ச.அ.ரின் எதிர்காலத்தை மட்டுமின்றி, காங்கிரஸின் எதிர்காலத்தையும் பாதிக்கும்.



• சவாலும் யதார்த்தமும்

● டி. சுப்ரமணியன், மேலையூர்

? விவசாயப் பெருங்குடி மக்களைத் தவிக்க விட்டுவிட மாட்டோம்; நிச்சயம் காவிரி நீரில் நமக்குள்ள பங்கினைப் பெற்றே தீருவோம் என்ற ஜெயலலிதாவின் பேச்சு குறித்து...?

! வடகிழக்குப் பருவமழைதான் ஜமாய்க்கிறதே. இன்னும் கொஞ்சம் காலத்துக்கு வாக்குறுதிகளே போதும், சமாளிக்கலாம்!

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1

? “தி.மு.க. - அ.தி.மு.க. ஆகிய இரண்டு திராவிட கட்சிகளுக்கும் சவால் விடும் ஒரே கட்சியாக காங்கிரஸ் ஜனநாயகப் பேரவையை மக்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்” என ப. சிதம்பரம் சொல்வதை எவ்வளவு தூரத்துக்கு நம்பலாம்?

! முற்றிலுமாக நம்பலாம். ஆனால், சவால் விட்டால் போதுமா? ஆட்சியைப் பிடிக்க வேண்டாமா? அதற்கென்ன வழி என்று யோசிக்க வேண்டாமா?



• இரட்டைக் கேடு... !



## நீங்கள் கேட்டவை - தராசு

• காப்பாற்றிய மழை!

● ராதாராமஸ்வாமி, திருநெல்வேலி - 11

? பெண்ணுரிமை தன் எல்லையைத் தொட்டுவிட்டதா?

! பிறக்கும் உரிமையே கூட பறிக்கப் பட்டு வரும் நிலையில் இப்படி ஒரு கேள்வியா!

● இ. கஸ்தூரி, அகஸ்தியர்பட்டி

? 'நேருக்கு நேர்' எந்த இடத்தில் கூடாது?

! என்கவுண்டரிலும் எதிர்க்கட்சி மேடையிலும். இரண்டுமே ஆபத்து.

● எஸ். நாராயணன், சென்னை

? மைனாரிட்டி சமூகத்தைச் சேர்ந்த நமது ஜனாதிபதி கலாமே பொது சிவில் சட்டத்தை வரவேற்றுள்ளாரே...?

! அவர் நாட்டு நலன் கருதித்தான் பேசுவார். அவர் கருத்துக்கு வரவேற்பு சிவப்புக் கம்பளமாக இருக்க வேண்டும்.



• மறைமுகக் கிண்டல்

அதன் ஆணி வேரைக் கண்டறியவில்லை என்பதைத் தான்.

● தாஸ், சென்னை

? கிரிக்கெட்டைப் போல் சினிமாவுக்கும் முக்கியத்துவம் அளித்து அரசு உதவி செய்ய வேண்டும் என்கிறாரே கமலஹாசன்...?

! சினிமாவுக்கு அரசு கொஞ்சமாகவா முக்கியத்துவம் தருகிறது! அடேங்கப்பா! நிற்க... கிரிக்கெட் ஆரோக்கியமான விளையாட்டு. பார்வையாளர்களைக் கெடுப்பதில்லை. சினிமா அப்படியா...? கிரிக்கெட்டில் கொஞ்சம் சூதாட்டம் புகுந்து கொண்டிருப்பது உண்மைதான். ஆனால் சினிமா A to Z சூதாட்டமாக இருக்கிறதே!



• விளையாட்டுப் பேச்சு!

● பொன்னாபுரம் பி. சிவக்குமார் பிரபு, திருப்பூர்

? ஓர் எழுத்தாளன் எப்போது ஜெயிக்கிறான்?

! அவன் எழுத்து அவன் காலத்துக்குப் பிறகும் ஜெயித்து நிற்கும்போது.

● ஏ.எஸ்.யோகானந்தம், ஒளவையார் பாளையம்

? மேத்யூ ஹேடனின் 380, டிராவிட் - கங்குலியின் 222 - 100.. எதைப் பாராட்டுவீர்கள்?

! மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கு மணம் உண்டு என்றால், நம் வீட்டுத் தோட்டத்தில் பூக்கும் மல்லிகைக்கு மணம் இல்லாமல் போய்விடுமா?!

● ஜோ.ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை

? சந்திரபாபு நாயுடு மீதான தாக்குதல் எதைக் காட்டுகிறது?...

! பயங்கரவாதத்தை நாம் புரிந்து கொண்டிருக்கிறோம்; ஆனால்

● சியாமளா ஈஸ்வரன், சேலம்

? வரும் தேர்தலில் 300 இடங்களில் பா.ஜ.க. வெற்றி பெற்றால், ராமர் கோயில்

ரூ.100 பரிசு பெறுபவர் :
ஆர். மாதவராமன்,
31/14, தெற்கு மாடத் தெரு, கிருஷ்ணகிரி - 635 001.

ரூ.50 பரிசு பெறுபவர் :
இரா. சந்திரசேகரன்,
பாரத ஸ்டேட் பாங்கு,
குளித்தலை - 639 104.

***கட்ட சட்ட ரீதியாக நடவடிக்கை எடுக்கப் படும் என்று இல. கணேசன் கூறுகிறாரே?***

! கடந்த வார கல்கியில் ப. சிதம்பரம் 'மெஜாரிடேரியன்' என்று குறிப்பிட்டது இது போன்ற புல்டோஜர் பிரகடனங் களைத்தான்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

***? 'அ.தி.மு.க. மெழுகுவர்த்தி அல்ல; ஊழித் தீ' என்ற அம்மாவின் விளக்கம் குறித்து...?***

! மெழுகுவர்த்தி தன்னை உருக்கிக் கொண்டேனும் ஒளி தரும்; ஊழித் தீ, எதிர்ப் படும் அனைத்தையும் பஸ்மமாக்கும்!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி

***? ஜெயலலிதா பங்கேற்கும் அரசு விழாக் களை காங்கிரஸ் புறக் கணிக்கப் போகிற தென்ற அறிவிப்பு பற்றி...?***

! இதனால் ஜெயலலிதாவுக்கோ அரசு விழாவுக்கோ நஷ்டமேதுமில்லை. நஷ்டம் காங்கிரசுக்குத்தான். அரசு விழாக்களை அ.தி.மு.க. வளர்ச்சிக்கு ஜெ. முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வார். கண்ணியம் காத்து, காங்கிரஸ் அதில் பங்கு பெற முடியாமல் நஷ்டம் அடையும்.

● இரா. சந்திரசேகரன் குளித்தலை

***? எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் தங்கள் கருத்தை மக்கள் மனத்தில் பதிய வைக்க குட்டிக் கதைகள் சொல்வதும் எழுதுவதும் வழக்கம்தானே... தமிழக முதல்வர் கதைகள் சொல்வதை மட்டும் ஏன் பத்திரிகைகள் ஏற்கவில்லை?***

! தாராளமாகக் கதை சொல்லலாம். ஆனால், அரசு விழாவைக் கட்சி நலனுக்குப் பயன்படுத்தி கதை சொல்லும்போதுதான் தவறான விதை ஊன்றியதாகிறது.

● நகை. தி.மகராசன், கடமலைக்குண்டு

***? மெரீனாவில் வாக்கிங் போன துண்டா...?***

! எங்க கட்டடத்தின் மொட்டை மாடிக்கு எதுவும் ஈடாகாது! கைக்கடிகாரத் தில் நாற்பது நிமிஷம் என்று கணக்கு வைத்துக் கொண்டால் போதும்.

# சிவகாமியின் சபதம்

முப்பத்தாறாம் அத்தியாயம்

## "வெற்றி அல்லது மரணம்"

வெள்ளைக் கொடி இறக்கப்பட்டதன் பொருள் என்ன, அதன் காரணம் என்னவாயிருக்கும் என்று யோசித்தவாறு சேனாதிபதி பரஞ்சோதி ஒரு நிமிஷம் நின்ற இடத்திலே நின்றார். அந்த நிமிஷத்திலேயே அவர் மனத்தில் உதித்த கேள்விகளுக்கு விடை சொல்லுவது போன்ற இந்திர ஜாலக் காட்சி கோட்டை மதில் நெடுகக் காணப்பட்டது. இத்தனை நாளும் வெறுமையாயிருந்த அந்த நெடிய விசாலமான மதிலின் மீது கையில் வேல் பிடித்த வீரர்கள் வரிசையாக நின்றார்கள். மாலை வேளையின் மஞ்சள் வெயிலில் அவர்கள் தலையில் அணிந்திருந்த இரும்புத் தொப்பிகளும், மார்பில் அணிந்திருந்த செப்புக் கலசங்களும், கையில் பிடித்த வேல்களின் கூரிய முனைகளும் பளபளவென்று ஒளி வீசித் திகழ்ந்தன.

"மகாராஜாதி ராஜ, சளுக்க குல திலக, திரிபுவன சக்கரவர்த்தி, சத்தியாச்ரய புலிகேசி நீடூழி வாழ்க!" என்று இடி முழக்கக் குரல் ஒலிக்க, அதைத் தொடர்ந்து, "ஜய விஜயீ பவ!" என்று ஆயிரக்கணக்கான குரல்கள் ஏக காலத்தில் ஆர்ப்பரித்தன.

அந்த அதிசயக் காட்சியைப் பார்த்துக் கொண்டு சேனாதிபதி பரஞ்சோதி சிறிது நேரம் திகைப்புற்று நின்றார். "அதோ! அதோ!" என்று அவர் பக்கத்

அமரர் கல்கி

திலிருந்த வீரர்களில் ஒருவன் கூவிய வண்ணம் கோட்டை முன் வாசலின் உச்சியைச் சுட்டிக்காட்டினான். அங்கே நெடிதுயர்ந்த கம்பீர உருவம் ஒன்று நின்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்தது. ஆ! அந்த உருவம் புலிகேசிச் சக்கரவர்த்தியினுடையதுதான்; சந்தேகமில்லை.



வெள்ளைக் கொடி இறங்கியதன் தாத்பரியம் பரஞ்சோதிக்கு அந்தக் கணமே நன்கு விளங்கிவிட்டது. புலிகேசிச் சக்கரவர்த்தி யுத்த களத்திலிருந்து தப்பிப் பிழைத்து இரகசியச் சுரங்க வழி மூலமாகவோ, அல்லது இரவு வேளையில் பல்லவ வீரர் காவலை மீறி மதில் ஏறிக் குதித்தோ, கோட்டைக்குள்ளே வந்து சேர்ந்துவிட்டார். சமாதானம் என்ற பேச்சு இனி இல்லை. யுத்தம் செய்தேயாக வேண்டும்; கோட்டையைத் தாக்கியே தீர வேண்டும். இன்னும் ஆயிரமாயிரம் மனிதர்களின் இரத்தம் வெள்ளமாக ஓடியேயாக வேண்டும்.



வாதாபி நகரம் தீப்பட்டு எரிந்தே தீர வேண்டும்.

இப்படிச் சேனாதிபதி எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் கோட்டை வாசல் உச்சியிலிருந்து திடீரென்று ஓர் அம்பு ஜிவ்வென்று பறந்து வந்தது. பரஞ்சோதி யின் தலைக்கு நேராக அந்த அம்பு வந்ததைப் பார்த்து அருகில் நின்ற வீரர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். ஒரு க்ஷண நேரம் அவர்கள் அவ்வளவு பேருக்கும் நெஞ்சத் துடிப்பு நின்று போயிருந்தது. நல்லவேளையாக அந்த அம்பு சேனா திபதியின் தலைக்கு மேலே ஒரு சாண் உயரத்தில் பாய்ந்து சென்று அவருக் குப் பின்னால் பூமியில் குத்திட்டு நின்றது.

மற்றவர்கள் எல்லாரும் திகிலடைந்த போதிலும் சேனாதிபதி ஒரு சிறிதும் கலங்கவில்லை. முகத்தில் புன்னகை யுடன் தரையில் பாய்ந்த அம்பை எடுக்கும்படி கட்டளையிட்டார். அதன் இறகில் ஒரு சிறு ஓலைச்சீட்டு கட்டி யிருந்தது. அதை எடுத்துப் பரஞ் சோதி படித்தார். "வெற்றி அல்லது மரணம்" என்று அதில் எழுதியிருந்தது.

பரஞ்சோதியின் இருதயத்திலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போல் இருந்தது. அவருடைய உள்ளத்திலே நடந்து கொண்டிருந்த போராட்டத்திற்கு இனி இடமில்லை. மீண்டும் யுத்தம் தொடங்கி இரத்த வெள்ளத்தைப் பெருக்கும் பொறுப்பு புலிகேசியின் தலை மேல் விழுந்து விட்டது. இனிமேல் மனத் தில் சஞ்சலம் எதுவுமின்றிக் கோட்டைத் தாக்குதலை நடத்தலாம்.

பரஞ்சோதி மேற்படி தீர்மானத்துக்கு வந்ததும், பக்கத்தில் நின்ற வீரனைப் பார்த்து, "சடையா? அதோ அந்தக் கோட்டை வாசலில் உள்ள கணபதி விக் கிரகம் கண்ணுக்குத் தெரிகிறதா!" என்று கேட்டார்.

"தெரிகிறது, சுவாமி! தாங்கள் அந்த விக்கிரகத்தின் அருகில் நின்று பார்த்த போது நானும் கவனித்தேன்!" என்றான் சடையன்.

"நல்லது! உனக்கு மிகவும் முக்கிய மான காரியம் ஒன்றைத் தருகிறேன். சூரியன் அஸ்தமித்து நன்றாக இருட் டியதும் நீயும் இன்னும் பத்து வீரர்களும் மதிற்சுவர் மீது நிற்கும் சளுக்க வீரர் கண்ணில் படாமல் கோட்டை வாசலுக் குப் போக வேண்டும். போய் அந்தக் கணபதி விக்கிரகத்துக்கு ஒருவிதமான சேதமும் ஏற்படாமல் பெயர்த்து எடுத்து என்னுடைய கூடாரத்துக்குக் கொண்டு வர வேண்டும். தெரிகிறதா? நீ அந்த விக்கிரகத்தைப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்ப்பதைப் பொறுத்துத்தான் நமக்கு இந்தக் கடைசி யுத்தத்தில் வெற்றி ஏற்பட வேண்டும்!" என்றார் சேனாதி பதி.

"அப்படியே, சேனாதிபதி! விநாய கரின் விக்கிரகத்தை சர்வஜாக் கிரதையாகக் கொண்டு வந்து கூடா ரத்தில் சேர்க்கிறேன்!" என்றான் சடை யன்.

உடனே சேனாதிபதி குதிரையைத் திருப்பிக் கொண்டு மாமல்ல சக்கர வர்த்தி தங்கியிருந்த கூடாரத்தை நோக்கி விரைந்து சென்றார்.

சக்கரவர்த்தியின் கூடாரத்தில் ஏற்கெனவே மற்ற தளபதிகள் எல்லோரும் வந்து சேர்ந்திருந் தார்கள். முடிவான கட்டளையைச் சக்கரவர்த்தியிடம் பெற்றுக் கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். சேனாதிபதி பரஞ்சோதியின் வருகைக் காகச் சக்கரவர்த்தி காத்துக் கொண் டிருந்தார். அவர் முகத்தில் அமைதி குடி கொண்டிருந்தது. தமக்கு அருகில் நின்றவர்களிடம் அவர் சாவதானமாகப் பேசிக் கொண்டிருந்தார். கோட்டை வாசலில் பறந்த வெள்ளைக் கொடி இறக்கப்பட்ட விவரமும், மதிற்சுவரின் மேல் சளுக்க வீரர் போருக்கு ஆயத்த மாய் நின்றதும் அங்கிருந்தவர்களுக்கு இன்னும் தெரியாது. சளுக்க வீரரின் யுத்த கோஷத்தை அவர்கள் பல்லவ



இப்படிச் சேனாதிபதி எண்ணமிட்டுக்
கொண்டிருக்கையில் கோட்டை வாசல்
உச்சியிலிருந்து திடீரென்று ஓர் அம்பு
ஜிவ்வென்று பறந்து வந்தது. பரஞ்சோதியின்
தலைக்கு நேராக அந்த அம்பு வந்ததைப் பார்த்து
அருகில் நின்ற வீரர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். ஒரு
க்ஷண நேரம் அவர்கள் அவ்வளவு பேருக்கும் நெஞ்சத்
துடிப்பு நின்று போயிருந்தது. நல்லவேளையாக அந்த
அம்பு சேனாதிபதியின் தலைக்கு மேலே ஒரு சாண்
உயரத்தில் பாய்ந்து சென்று அவருக்குப் பின்னால்
பூமியில் குத்திட்டு நின்றது. அதன் இறகில் ஒரு சிறு
ஓலைச்சீட்டு கட்டியிருந்தது. அதை எடுத்துப்
பரஞ்சோதி படித்தார். ''வெற்றி அல்லது மரணம்'' என்று
அதில் எழுதியிருந்தது.

வீரரின் கோஷம் என்று எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அவ்விதம் அமைதி குடி கொண்டிருந்த சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் பரஞ்சோதி புயல் நுழைவது போல் நுழைந்து முதலில் சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினார்.

''பிரபு...!'' என்று அவர் மேலும் பேசுவதற்குள்ளே மாமல்லர் குறுக்கிட்டுக் கூறினார்:

''சேனாதிபதி! ஏன் இவ்வளவு பரபரப்பு! இந்த மூன்று நாளும் சிந்தனை செய்ததில் உம்முடைய யோசனைதான் நியாயத்துக்கும் தர்மத்துக்கும் உகந்தது என்ற முடிவுக்கு வந்தேன். கோட்டையின் சரணாகதியை ஒப்புக்கொண்டு யுத்தத்தை நிறுத்துவது என்று முடிவு செய்து விட்டேன்!'' என்றார்.

சேனாதிபதி முன்னைக் காட்டிலும் அதிகப் பரபரப்பை அடைந்து, கண்ணில் நீர் ததும்பத் தொண்டை அடைக்கக் கூறினார்.

''பிரபு! நான் அறிவீனன்; நான் சொன்ன யோசனை அபத்தம். தாங்கள் முதலில் இட்ட கட்டளைதான் நியாயம், தர்மம் எல்லாம். என் யோசனைப்படி மூன்று நாள் தாமதித்ததே பெருந்தவறு. பிரபு! கோட்டை வாசலில் வெள்ளைக் கொடி இறங்கிவிட்டது. மதிற்சுவர் மேல் சளுக்க வீரர்கள் போர்க் கோலம் பூண்டு நிற்கிறார்கள்!''

பரஞ்சோதி இவ்விதம் சொன்னதைக் கேட்டு, அங்கிருந்தவர்கள் அனைவரும் அளவற்ற வியப்பும் ஆத்திரமும் அடைந்தார்கள்.

சக்கரவர்த்தி தாம் வீற்றிருந்த ஆசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்து, ''சேனாதிபதி! நீர் சொல்லுவது உண்மைதானா!'' என்று கர்ஜித்தார்.

''உண்மை, பிரபு! என் கண்ணாலேயே பார்த்தேன்! பார்த்துவிட்டு நேரே இவ்விடம் வருகிறேன்!''

''இந்த மாறுதலுக்குக் காரணம் என்னவென்று ஏதேனும் ஊகிக்க முடிகிறதா?'' என்றார் மாமல்லர்.

''ஊகம் வேண்டியதில்லை, பிரபு! புலிகேசி போர்க்களத்தில் சாகவில்லை. தப்பிப் பிழைத்துக் கோட்டைக்குள்ளே எப்படியோ வந்து விட்டான். கோட்டை வாசல் உச்சியில் வாதாபிச் சக்கரவர்த்தி நின்று தமது சைனியத்தைப் பார்வையிட்டதையும் நான் கண்ணால் பார்த்தேன். சந்தேகத்துக்கு இடமில்லாதபடி இதோ புலிகேசியின் ஓலையும் இருக்கிறது. அம்பின் இறகிலே கட்டி இந்த ஓலை எனக்குக் கிடைத்தது!'' என்று சொல்லிக் கொண்டே, ''வெற்றி அல்லது மரணம்'' என்று எழுதியிருந்த ஓலைத் துண்டைச் சக்கரவர்த்தியிடம் பரஞ்சோதி காட்டினார்.

''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. வாதாபிக்கு நேரும் கதிக்குப் பாவம் பழி எல்லாம் அவன் தலைமேலே!'' என்று மாமல்லர் உற்சாகமான குரலில் கூறிவிட்டு, ''சேனாதிபதி! இனிமேல் சந்தேகம் ஒன்றுமில்லையே, கோட்டையைத் தாக்க ஆரம்பிக்கலாமல்லவா?'' என்று கேட்டார்.

''இனி ஒரு சந்தேகமும் இல்லை. பிரபு! எல்லாம் ஆயத்தமாயிருக்கிறது. இன்னும் ஒரு முகூர்த்த நேரத்தில் நமது யானைப்படை கோட்டை வாசலைத் தகர்க்க ஆரம்பித்து விடும். நம் வீரர்கள் கோட்டை மதிலைத் தாண்டி உள்ளே பிரவேசிக்க ஆரம்பித்து விடுவார்கள்!'' என்றார் சேனாதிபதி.

பின்னர் அங்கு நின்ற தளபதிகளைப் பார்த்து, ''எல்லோரும் அவரவருடைய படைகளுக்குச் செல்லுங்கள். நகரத்துக்குள்ளே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை இன்னொரு தடவை நம் வீரர்களுக்கெல்லாம் ஞாபகப்படுத்துங்கள். பேரிகை முழக்கம் கேட்டதும் புறப்படுவதற்கு ஆயத்தமாயிருங்கள்'' என்றார்.

இதைக் கேட்டதும் அங்கு நின்ற தளபதிகள் எல்லாரும் சக்கரவர்த்திக்கும் சேனாதிபதிக்கும் வணக்கம் செலுத்திவிட்டு உற்சாகத்துடன் விரைந்து வெளியேறினார்கள். சக்கரவர்த்தியும், அவரு

டைய மெய்க்காவலர் இருவரும், மானவன்மரும், சேனாதிபதி பரஞ்சோதியும் மட்டும் அங்கே மிச்சமாயிருந்தார்கள்.

"சேனாதிபதி! நகரத்துக்குள் நடந்து கொள்ள வேண்டியது பற்றி நம் வீரர்களுக்கு என்ன கட்டளையிட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் மாமல்ல சக்கரவர்த்தி.

"பிரபு! குழந்தைகளுக்கும் ஸ்திரீகளுக்கும் எந்தவிதத்திலும் துன்பமுண்டாக்கக் கூடாது என்று கட்டளையிட்டிருக்கிறேன். ஆண் மக்களில் எதிர்த்தவர்களையெல்லாம் கொன்று விடும்படியும், பணிந்தவர்களையெல்லாம் சிறைப் பிடிக்கும்படியும் கட்டளையிட்டிருக்கிறேன். வாதாபி சாம்பலாக வேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறேன். தீயை அணைக்க முயல்வோரை எல்லாம் கொன்று விடும்படி சொல்லியிருக்கிறேன். நகரை விட்டு ஓட முயலும் பிரஜைகளைப் போக விடும்படியும், ஆனால் அவர்கள் எந்தவிதமான பொருளையும் கொண்டு போக விடக் கூடாது என்றும் ஆக்ஞையிட்டிருக்கிறேன். நம்முடைய வீரர்கள் வாதாபி நகரிலிருந்து அவரவரால் முடிந்த வரையில் பொருள்களைக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்றும், ஒவ்வொருவரும் கொண்டு வருவதில் பாதிப் பொருள் அவர்களுக்கே திருப்பிக் கொடுக்கப்படும் என்றும் சொல்லியிருக்கிறேன். இன்னும் ஏதேனும் கட்டளையிருந்தால் தெரியப்படுத்த வேண்டும்" என்றார் பரஞ்சோதி.

"சேனாதிபதி! நான் சொல்லுவதற்கு ஒரு விஷயமாவது மிச்சம் வைக்கவில்லை. எல்லாம் முன் யோசனையுடன் செய்திருக்கிறீர்கள்!" என்றார் மாமல்லர்.

"பிரபு! இன்னும் ஒரு முக்கியமான காரியம் இருக்கிறது. அதை நம் இலங்கை இளவரசருக்கென்று வைத்திருக்கிறேன். தாங்கள் கட்டளை பிறப்பிக்க வேண்டும்!" என்றார்.

மாமல்லர் மறுமொழி சொல்லுவதற்குள்ளே, "சேனாதிபதியின் கட்டளைக்குக் காத்திருக்கிறேன்!" என்றார் மானவன்மர்.

"வாதாபிச் சக்கரவர்த்தியின் அரண்மனையில் உலகத்திலே வேறு எந்த நாட்டு அரசர் அரண்மனையிலும் இல்லாத செல்வங்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஹர்ஷவர்த்தனர் ஐந்து வருஷத்துக்கொரு தடவை தம் செல்வங்களையெல்லாம் பிரஜைகளுக்குத் தானம் செய்து விடுகிறார். மகாலோபியான புலிகேசி அப்படியெல்லாம் செய்வதில்லை. முப்பது வருஷமாகச் சேகரித்த குபேர சம்பத்துக்கள் புலிகேசியின் அரண்மனையில் இருக்கின்றன. அந்தச் செல்வங்களைப் பத்திரமாய்ப் பாதுகாத்துக் கொண்டு வர வேண்டிய பொறுப்பை மானவன்மர் ஏற்றுக் கொள்ள வேண்டும். எல்லாச் செல்வங்களையும் அப்புறப்படுத்தி விட்டுப் பிறகுதான் அரண்மனையை எரிக்க வேண்டும். இந்தக் காரியத்தில் மானவன்மருக்கு ஒத்தாசை செய்ய ஐயாயிரம் வீரர்களைத் தனியாக வைத்திருக்கிறேன்!"

இதையெல்லாம் மாமல்லரைப் பார்த்தே சேனாதிபதி கூறினார்.

"சேனாதிபதி! தங்கள் விருப்பத்தை மானவன்மர் நிறைவேற்றுவார். ஆனால், வாதாபி நகருக்குள்ளே அரண்மனைச் செல்வங்களைத் தவிர காப்பாற்ற வேண்டிய செல்வம் வேறொன்றுமில்லையா? அதைப் பற்றி என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?" என்று மாமல்லர் கேட்டபோது அவரது குரல் கம்மிற்று.

சிவகாமி தேவியைப் பற்றித்தான் சக்கரவர்த்தி கேட்கிறார் என்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டார்.

"பிரபு! அந்தப் பொறுப்பை மட்டும் அடியேன் வைத்துக் கொண்டிருக்கிறேன். வேறு யாரிடமும் அதை ஒப்புவிக்க எனக்கு விருப்பமில்லை" என்றார்.

"ரொம்ப நல்லது. சத்ருக்னன் இது வரையில் செய்தி ஒன்றும் கொண்டு வரவில்லையா?"

"ஒவ்வொரு கணமும் அவனைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

# அருள்வாக்கு

கட்டாகத் தெரிகிற சாஸ்திரங்கள் வாஸ்தவத்தில் கட்டுமில்லை. நிஜ ஸ்வதந்திரமான மோக்ஷத்துக்கு வழி பண்ணுவது அதுதான். 'தொம்பங் கூத்தாடி' என்பார்கள்.



'ஸ்தம்பக் கூத்தாடி' என்பதுதான், அப்படித் திரிந்து வந்திருக்கிறது. ஸ்தம்பம் என்பது தூண். 'மாஜிக் ஷோ'வில் தொம்பங் கூத்தாடி வருவான்.

அநேகத் தூண்களில் ஒன்றில் அவனை ஏகப்பட்ட கட்டுப் போட்டுக் கட்டி வைத்திருக்கும். ஒரு திரையால் சொடக்குப் போடுகிற நாழி அவனை மறைத்து விட்டுத் திரையை எடுப்பார்கள். அந்த க்ஷண காலத்துக்குள் அவன் எப்படியோ அத்தனை கட்டுக்களையும் அவிழ்த்து விட்டு அந்தத் தூணிலிருந்து விடுபட்டு, அதோடு மட்டுமில்லாமல் இன்னொரு தூணில் அதே மாதிரி அவ்வளவு கட்டுக்களையும் போட்டுக் கொண்டு காணப்படுவான். அவனுக்கு அப்படி ஒரு தந்திரம் தெரியும். முதலில் கட்டினபோது கை, கால்களை ஒரு மாதிரி அகட்டி (அகற்றி) வைத்துக் கொண்டிருப்பான்; திரை போட்டவுடன் அவற்றைக் குறுக்கிக் கொள்வான்; உடனே கட்டுத் தளர்ந்து விடும், அது கீழே விழுவதற்குள் மறுபடியும் அதே மாதிரி அகட்டிக் கொண்டு இன்னொரு தூணுக்குப் போய் விடுவான். இப்படித் தன் அங்கங்களைக் குறுக்கிக் கொள்வதாலேயே, அவற்றுக்கு மேலே போட்ட கட்டு விரிகிற மாதிரிதான் சாஸ்திரக் கட்டுக்களும், அஹங்காரத்தை மேலேயிருந்து கட்டுவது சாஸ்திரம். நாமே உள்ளுக்குள்ளிருந்து நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்காக, நம்மைப் பக்குவப்படுத்துவதற்கே இந்தக் கட்டு. ஆசாரக் கட்டுகளைப் போட்டுக் கொண்டால் நிஜமான ஆத்ம ஸ்வதந்திரத்தை அடையலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

"சேனாதிபதி! எல்லாருக்கும் கட்டளையிட்டீர். எனக்கு மட்டும் ஒரு வேலையும் தரவில்லையே? நான் என்ன செய்யட்டும்?"

"பிரபு! தாங்கள் இங்கேயே, இந்தக் கூடாரத்திலேயே இருக்க வேணும் என்பது அடியேன் பிரார்த்தனை."

"வாதாபி நகருக்குள் நான் வரவே வேண்டாமா?"

"அவசியமானால் சொல்லியனுப்புகிறேன்; உடனே வந்து சேர ஆயத்தமாயிருக்க வேணும். இப்போது என்னோடு கண்ணனை ரதத்துடன் அனுப்பி வைக்க வேணும்!"

"அப்படியே அழைத்துக் கொண்டு போங்கள். இங்கே நான் முள்ளின் மேல் இருப்பது போலத்தான் இருப்பேன்."

"பிரபு! விநாயகப் பெருமான் கருணையால் எல்லாம் நன்றாக முடியும். கவலைப்பட வேண்டாம். அவசியம் ஏற்பட்டதும் உடனே சொல்லியனுப்புகிறேன். இப்போது விடை கொடுங்கள்."

"போய் வாருங்கள், சேனாதிபதி! வழக்கம் போல் வெற்றி மாலை சூடித்திரும்புங்கள்!"

சேனாதிபதி கூடாரத்திலிருந்து விரைந்து சென்றார். அவர் போனவுடன் சக்கரவர்த்தி, "இது என்ன, திடீரென்று விநாயகக் கடவுளிடம் இவருக்கு இவ்வளவு பக்தி!" என்று வியந்தார்.

(தொடரும்)



* ஸ்ரீ குரங்குநாதஸ்வாமி கோயில்



* முசிறியில் திருவள்ளுவர் கோவில்

# சிவபெருமான் சைவமா? அசைவமா?

சோழர்களின் தலைநகராக இருந்த உறையூரில் காந்திமதி உடனுறை பஞ்ச வர்ணேஸ்வரர் கோயில் கொண்டுள்ளார். திருஞானசம்பந்தராலும் மாணிக்க வாசகராலும் பாடப் பெற்ற இத்தலத்துக்கு சுற்றுலாப் பயணிகள், வெளியூர் பக்தர்களின் வருகை அதிகம். ஆனால் இக்கோவிலின் சன்னதித் தெருவின் இரு மருங்கிலும் வரிசையாகக் கசாப்புக் கடைகள் காட்சி அளிக்கின்றன. இது பக்தர்களின் மனத்தைப் பெரிதும் துன்புறுத்துகிறது. "சிவபெருமான் சைவமா? அசைவமா?" என்று பலரும் புலம்புகிறார்கள்.

திருச்சி மாநகராட்சி இதற்குத் தீர்வு காணக் கூடாதா?

- என் சுந்தரராஜன், திருச்சி - 3

குணசீலம் என்றதும் மனநிலை பிறழ்ந் தவர்களைக் குணப்படுத்தும் கோயில் என்பதுதான் நினைவுக்கு வரும். ஆனால் அந்த குணசீலம் வெங்கடேசு வரர், இன்னொரு விதத்திலும் தனித் தன்மை கொண்டவர்! எந்த வைணவ தெய்வத்துக்கும் இல்லாதபடி, இவர் தமது கரங்களில் 'வேல்' வைத்திருக்கிறார்.

- சம்பத்குமாரி

இந்திரா காந்தி மகளிர் கல்லூரியின் பின்புறமுள்ளது அருள்மிகு காவிரி அம்மன் கோயில். இக் கோயில் தூணில் சூரியனிடம் வேதம் பயின்ற யாக்ஞவால்கியரின் சிற்பம் இருப்பதும் சிறப்பு. தமிழகத்தில் வேறெங்கும் காவி ரித் தாய்க்குக் கோயில் இல்லை.

- கெ. அன்புபாலாஜி, திருச்சி - 2

திருச்சிக்கு வரும் சுற்றுலாப் பயணி களுக்கு தொட்டியம் அருகேயுள்ள சீனிவாச நல்லூரில் ஒரு வரலாற்று பொக்கிஷம் காலர்

காலமாய்க் காத்திருக்கிறது. இந்த கிராமத்தில் உள்ள ஸ்ரீ குரங்கு நாதஸ்வாமி கோவில் பதினொரு நூற்றாண்டுகள் பழைமையானது. முதலாம் பராந்தக சோழனால் கட்டப்பட்ட இக்கோயிலில் இப்போது வழிபாடு இல்லை. இடைக்கால சோழர்களின் கட்டடக் கலைக்கும் சிற்பக் கலைக்கும் அபாரமான எடுத்துக்காட்டு. கோயிலின் கருவறையில் உள்ள சூரியனார் சிலையை, சூரிய உதயம் முதல் அஸ்தமனம் வரை, எந்த விளக்கு மில்லாமல் தரிசிக்கலாம். அப்படியொரு கட்டடக் கலை உத்தி. இந்தக் கோயிலின் அழகையும், இங்குள்ள சிற்பங்களின் அழகையும் ரசித்துவர அரை நாள் தேவைப் படும். கோவில், தொல் பொருள் துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது.

முசிறி காவிரிக் கரையில் திருவள்ளுவருக்கு ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. கொண்டை நேர் கொண்ட கோலத்தில் வடக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார் திருவள்ளுவர். திருவேங்கிமலை திருவள்ளுவர் மன்றம் முயற்சியில் எழுப்பப்பட்டுள்ள இக்கோவிலில், ஞாயிறு அன்றும் திருக்குறளை முழுவதுமாய் ஓதும் நிகழ்ச்சி நடைபெற்று வருவது சிறப்பு.

- லயன் கே. துளசிதாசன்,
முசிறி

## டும்டும் சேவை!

'சமூக சேவைக்கு வயது தடையில்லை' என்று நிரூபித்துக் காட்டியுள்ளனர் முசிறியில் வசித்து வரும் சீனியர் தம்பதிகள். தங்கள் ,வீட்டிலேயே முற்றிலும் இலவச ஜாதக பரிவர்த்தனை நிலையம் ஒன்றைச் செயல்படுத்திவரும் எம்.கே.முனுசாமி செட்டியாருக்கு வயது 77. அவரது இல்லத்தரசி மு. பிரமிளா அம்மாளுக்கு வயது 71.

இந்தச் சேவைக்காக ஒரு ரூபாய் கூட கட்டணமோ, நன்கொடையோ வசூலிப்பதில்லை என்பதுதான் ஹைலைட். பதிவுக் கட்டணம், தபால் செலவு, ஜாதகப் பரிமாற்ற அடிப்படைச் செலவுகள் என எதனையும் சம்பந்தப்பட்டவர்கள் மீது சுமத்துவதில்லை. அவ்வளவு ஏன்? இங்கு வரும் அன்பர்கள் எதேச்சையாக வாங்கித் தர முயற்சிக்கும் ஒரு குயர் அன் ரூல்டு பேப்பரைக்கூட அவர்கள் பெற்றுக் கொள்வதில்லை. கவிதா என்கிற துறுதுறு இளம்பெண் இங்கு எழுத்தராகப் பணியாற்றி வருகிறார். அப்படியானால் நிர்வாகச் செலவுகள்? மாதம் ஏழாயிரம் ரூபாயிலிருந்து பத்தாயிரம் வரைக்குமாக, இதற்கெனத் தமது சொந்தப் பணத்திலிருந்து செலவு செய்து வருகிறார் எம்.கே. முனுசாமி செட்டியார்.

இப்போது இவர்களிடம் இரு பாலருக்குமான மொத்தம் ஐந்தாயிரம் ஜாதகங்கள் பார்வையில் இருக்கின்றன. கடந்த ஏழு வருடங்களில் மட்டும், இவர்களது ஜாதகப் பரிவர்த்தனை மூலமாக முந்நூற்று ஐம்பது திருமணங்கள் நடந்துள்ளன. அத்தகைய மண விழாக்களுக்கும் இவர்கள் செல்வதில்லை. முகூர்த்த நேரத்தின்போது, மானசீகமாக வாழ்த்தி விடுகின்றனர். திருமணத்தில் பங்கேற்றால், இரு வீட்டாரும் அவசியம் தங்களை உபசரிக்க நேர்ந்து விடும் என்பதால் தவிர்த்து விடுகிறார்களாம்!



கட்டுரை, படம் : **திருவரசு**

# கை... தாயானது!


★ படம் : வேணு

14

கிளப் ஹவுஸில் இருந்தபோது, அங்கே ஒரு நண்பன். பெயர் ராஜா. அவனுக்கு அமெரிக்கத் தூதரகத்தில் வேலை. நல்ல சம்பளம். அதுவும், பதினைந்து நாட்களுக்கு ஒருதடவை சம்பளம் தருவார்கள். எங்கள் நட்பு வட்டாரத்தில் அவன்தான் நல்ல வசதியானவன்.

ராஜா ரொம்ப நல்லவன். பல சமயங்களில் ஆபீஸிலிருந்து, மாலையில் சம்பளத்துடன் கிளப் ஹவுஸுக்கு வந்து, சட்டையைக் கழற்றி கொடியில் மாட்டிவிட்டு, முகம் கழுவிக் கொண்டு வர பாத்ரூம் வரை போவான்.

திரும்பி வந்து பார்க்கிறபோது, அவன் சட்டைப் பையில் வைத்திருந்த சம்பளப் பணத்தில் கொஞ்சம் காணாமல் போயிருக்கும். "டேய்... டேய்... ஏண்டா இப்படிச் செய்யறீங்க?" என்பான் பரிதாபமாக.

"உன்னைப் போல, நல்ல வேலை, எங்களில் யாருக்காவது இருக்கா? உன் அளவு சம்பளத்தை நாங்கள் கனவில் தானே பார்க்க முடியும்? எங்களுக்கெல்லாம் நீ உதவி செய்யாவிட்டால் வேறு யார் உதவுவார்கள்? உன்னைப் போல நண்பன் எங்களுக்குக் கிடைத்தது நாங்கள் செய்த பூர்வஜென்ம புண்ணியம்" என்று ராஜாவை ஐஸ்மழையில் குளிப்பாட்டுவோம். அவனும் சமாதானமடைந்து விடுவான்.

அந்த 'ராஜா' வேறு யாருமில்லை. நடிகர் ஸ்ரீகாந்த்தான்.

பல்வேறு நாடகக் குழுக்களில், நடித்துக் கொண்டிருந்த எனக்கு, நாமே ஏன் சொந்தமாக ஒரு நாடகக் குழு ஆரம்பிக்கக் கூடாது என்று தோன்றியது. நாடகக் குழு ஆரம்பிக்க, பெரிசாய் பணமுதலீடு ஏதும் தேவையில்லையே! உடனே செயலில் இறங்கினேன்.

காங்கிரஸ் மைதானத்தில் அப்போது நிறைய பொருட்காட்சிகள் நடக்கும். அங்கே, ஜனங்களைக் கவரும் விதமாய் நாடகங்கள் போடப்படும். புது நாடகக் குழு ஆரம்பிக்க முடிவெடுத்தவுடன், எக்ஸிபிஷனில் நாடகங்களுக்குப் பொறுப்பாளராக இருந்த சுந்தரராஜன் என்கிற நண்பரைப் பிடித்தோம்.

அடுத்து, ஸ்கிரிப்ட்டுக்கு என்ன செய்வது?

தபால் துறையில் கோபாலகிருஷ்ணன் என்று ஒரு நண்பர். அவர் நாடகங்கள் எழுதுவார். அவரிடம் போய், ஒரு நாடகம் கேட்டேன். கடைசியில், அவர் ஏற்கெனவே எழுதிய இரண்டு நாடகங்களைச் சேர்த்து, மூன்று மணி நேரம் நாடகமாகப் போட்டுக் கொள்ள முடிவு செய்தேன். 'கப் அண்டு சேஸ்', 'கைராசி' என்று இரண்டு நாடகங்களை வாங்கிக் கொண்டு வந்தேன்.

அடுத்து நடிக்க ஆள் வேண்டுமே? டைப்பிஸ்ட் கோபுவைச் சேர்த்துக் கொண்டேன். கூடவே இருந்த ஸ்ரீகாந்துக்கு நடிக்க ஆர்வம் இருந்தது. அவனையும் என் நாடகக் குழுவில் இணைத்துக் கொண்டேன்.

நேரே எக்ஸிபிஷன் நாடகப் பொறுப்பாளர் சுந்தரராஜனைப் போய்ப் பார்த்து, தேதி வாங்கி விட்டேன். "என்ன ரேட்?" என்று அவர் கேட்க,

"அதிகம் ஒண்ணும் வேணாம் சார்! வெறும் எண்பத்து ஆறு ரூபாய் பத்துக் காசு கொடுத்தால் போதும்" என்றேன். வழக்கமாக, நாடகக் குழுக்கள் ஒருதடவை நாடகம் போட இருநூறு ரூபாய் வரை கேட்டுக் கொண்டிருக்கும்போது, நான் ரொம்பக் குறைவாகக் கேட்டதில் அவருக்கு எதிர்பாராத ஆச்சரியம்.

"அதென்ன பத்துக் காசு?" என்றார்.

"வேறே ஒண்ணுமில்லை; நாடகம் போட்டு முடிச்சதும், மேக் அப்போட



* ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்' - ஸ்ரீகாந்த், நாகேஷ், லட்சுமி
* படம் - நன்றி: ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

வீட்டுக்குப் போக முடியாதே! மேக் அப்பைக் கலைக்க தேங்காய் எண்ணெய் வாங்கத்தான் பத்துக்காசு எக்ஸ்ட்ரா" என்றேன்.

**கா**ங்கிரஸ் மைதானத்தில் எங்கள் நாடகம் முதல் தடவை நடந்தபோது, அதற்குக் கிடைத்த வரவேற்பு அபாரமாக இருந்தது. இத்தனைக்கும் எங்களுக்கு, எக்ஸிபிஷன் மைதானத்தின் பிரதான நாடக மேடையைத் தரவில்லை. நுழைவாயிலை ஒட்டி, சற்று ஒதுக்குப்புறமான ஓர் இடத்தில் இருந்த சிறிய மேடையைத்தான் கொடுத்திருந்தார்கள். நாடகம் ஆரம்பித்தபோது, அசுவாரசியமாக நின்று, நாடகம் பார்த்த மக்கள், நேரம் ஆக, ஆக... நாடகத்தால் ஈர்க்கப்பட்டு, அப்படியே உட்கார்ந்து விட்டார்கள். நாடகம் பாதி நடக்கும்போது, கூட்டம் தாளவில்லை: அதற்குப் பின் எங்களுக்கு நிறைய வாய்ப்புகள் வர ஆரம்பித்தன.

**செ**ன்னை மியூஸியம் தியேட்டரில் ஒரு நாடகம். அதில் எனக்கு 'தை' தண்டபாணி என்கிற சினிமா டைரக்டர் கேரக்டர். நாடகத்தில் மொத்தமாக எனக்கு ஆறேழு சீன்கள்தான் என்றாலும், நான் பிய்த்து உதறினேன். ஒரே கைத்தட்டல்தான். நாடகத்துக்குச் சிறப்பு விருந்தினராக வந்திருந்த பிரமுகர், "குறைந்த காட்சிகளில்தான் வந்தார் என்றாலும், தம்முடைய அபார நடிப்பால் அனைவரது கைத்தட்டல்களையும் பெற்றுவிட்ட நாகேஷை இனி அனைவரும் 'தை'நாகேஷ் என்றே குறிப்பிடலாம்" என்று பாராட்டிப் பேசினார்.

மறுநாள், அந்தச் செய்தி 'தி ஹிந்து' போன்ற ஆங்கிலப் பத்திரிகைகளில் வெளியானது. அதில், 'தை' நாகேஷ் என்பதை ஆங்கிலத்தில் 'Thai' Nagesh என்று குறிப்பிட்டிருந்தார்கள். அதை 'தாய்' என்று தமிழில் புரிந்துகொண்டு பலரும் என்னை 'தாய் நாகேஷ்' என்றே குறிப்பிட ஆரம்பித்தார்கள். தெலுங்குப் பட உலகில்கூட பலகாலம் என்னை நிறையப் பேர் தாய் நாகேஷ் என்றுதான் சொல்வார்கள். கிளப்ஹவுஸுக்கு என்னைப் பார்க்க வருகிறவர்களில் சிலர், "தாய் நாகேஷ் இருக்காரா?" என்று கேட்பார்கள்.

ஸ்ரீகாந்த் போன்ற நண்பர்கள், என்னை வெறுப்பேத்துவது போல ஏதாவது சொல்லி, நான் பதிலுக்குக் கோபித்துக் கொண்டு கத்தினால், "டேய்! உன்னை எல்லாரும் 'தாய் நாகேஷ்' என்கிறார்கள். இப்போ கத்துவதைப் பார்த்தால் 'நாய் நாகேஷ்' என்பதுதான் பொருத்தமாக இருக்கும்" என்று கிண்டலடிப்பார்கள்.

(தொடரும்)

■ நாகேஷ் ■

# நடக்குமென்பார்: நடக்கும்!

**அக்னிசர்மா பக்கம்**

**அக்டோபர் 29 முதல் நவம்பர் 4 வரை**

### மேஷம்

மனசுல துணிவு, தன்னம்பிக்கை அதிகரிக்கும். பண நடமாட்டம் தாராளமாக இருக்கும். புதியவர்கள் சந்திப்பு உண்டு. இதன்மூலம் பயன் அடைய வாய்ப்பிருக் கிறது. வேலை விஷயமாக சிலர் வெளியூர், வெளிநாடு செல்லலாம். குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும். ஏற்றுமதி , இறக்குமதி வெளிநாட்டுத் தொடர்புடைய வர்த்தகங்கள் எதிர்பாராத ஆதாயத்தைக் கொட்டும்.

### ரிஷபம்

சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு மறையும். எல்லோரிடமும் சுமுகமாகப் பழகுவது நல்லது. புதிய முயற்சிகளைக் கொஞ்ச காலம் தள்ளிப் போடுங்கள். குடும்பத்தில் பணப் பிரச்னை ஏற்பட்டாலும் ஈஸியா சமாளிப்பீங்க. செலவு கட்டுக்கடங்காது. எதிர்பார்த்த நல்ல செய்தி தேடி வரும்.

### மிதுனம்

இந்த வாரம் நீங்க எந்தக் காரியத்தை எடுத்தாலும் வெற்றிதான். அலுவலகத்தில் எல்லோருடைய ஒத்துழைப்பும் கிடைக்கும். உயரதிகாரிகள் ஆதரவும் பாராட்டும் உண்டு. புதிய முயற்சி கைகொடுக்கும். பணம் கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் எச்சரிக்கை அவசியம். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு தேடி வரும்.

### கடகம்

குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சொத்து விவகாரத்தில் வெற்றி உண்டு. பெண்களுக்கு அதிர்ஷ்டம் அடிக்கப் போகுது. எதிர்பாராத திடீர்ப் பயணத்துக்கு வாய்ப்பிருக்கு. பேச்சில் நிதானம் அவசியம். வர வேண்டிய பணம் வந்து சேரும். கடன் தொல்லைகள் குறையும். கலைத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு முன்னேற்றம் உண்டு.



மகர ராசிக்காரரான சிம்ரன் எதிர்பார்த்த நல்ல தகவல் வந்து சேரும்!

### சிம்மம்

எதிர்பார்த்த நல்ல தகவல் வந்து சேரும். பணவசதி தேவைக்கேற்ப கிடைக்கும். புதிய தொழில் முயற்சி வெற்றி தரும். கொடுக்கல் வாங்கல்களில் அனுகூலம் உண்டு. சினிமா, நடனம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்குப் பெயர், புகழ் உண்டு.

### கன்னி

உங்கள் பேச்சில் கவர்ச்சி கூடும். எவ்வளவு சிக்கலான காரியத்தையும் சாமர்த்தியமா செய்து முடிப்பீங்க. இதனால புகழ், பாராட்டுக் கிடைக்கும். இதுவரை இருந்த தடைகள் மாயமாகும். வர வேண்டிய பணம் வந்து சேரும். சிலர், புது வீடு கட்ட, வாங்க சந்தர்ப்பம் அமையும்.

### துலாம்

இதுவரை தாமதமாகிவந்த காரியங்கள் இப்போ நிறைவேறும். மனத்தில் உற்சாகம் பொங்கும். குடும்பத்தில் மகிழ்ச்சிக்குக் குறைவில்லை. வழக்கு விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் வரும். புதிய தொழில் முயற்சிகள் நன்மை தரும்.

### விருச்சிகம்

எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். அலுவலகத்தில் சிறு சிறு



# 'ஷோக்கா' சொன்னீங்க!



'வணக்கத்துக்குரிய வயிறே' மருத்துவத் தொடருக்கு பதினைந்து வாரங்களிலேயே 'வணக்கம்' போட்டது, செகண்ட் இன்னிங்ஸ் ஆடாமலேயே டெஸ்ட் மேட்ச் முடிவுற்ற ஏமாற்றத்தை அளித்தது.

**- ஷோபியாப்ரியன், பூனாம்பாளையம்**

வாரா வாரம் இப்படி (அ)'ஷோக்'கா எழுதிய டாக்டர் எங்களின் அன்பான வணக்கத்துக்குரியவரே!

**- விஜயாமுரளி, சென்னை**

சிறந்த மருத்துவ ஆலோசனைப் பயிலகங்களுக்குச் சென்று வந்த திருப்தியைத் தந்தது 'வணக்கத்துக்குரிய வயிறே' தொடர்! ஆபத்தான விஷயங்களைக் கூட மிகவும் நாசூக்காக நகைச்சுவையுடன் விவரித்து 'வயிறு நமக்கு உயிரு' என்று உணர்த்திவிட்டார்.

**- சுஜாதா, சென்னை**

ஆரோக்கிய விஷயத்திலும் கோடீஸ்வரராக இருப்பதற்கு டாக்டர் அஷோக் சொன்ன கருத்துகள் எளிமை, அருமை.

**- வே. ஈஸ்வரன், ராஜபாளையம்**

பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். வேலை விஷய மாக வெளியூர் போக வாய்ப்பிருக்கு. புதிய வேலை முயற்சிகள் கைகூடும். இதுவரை இருந்த பொருளாதார நெருக்கடி குறையும். குடும்பத்தில் சுபகாரிய முயற்சிகள் கைகூடும்.

### தனுசு

இந்த வாரம் காரியங்களில் வெற்றியுண்டு. பணநடமாட்டம் தாராளமா இருக்கும். அலுவலகத்தில் மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். கடன் தொல்லைகள் மறையும். சுயமாகத் தொழில் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். குடும்பத்தில் இதுவரை இருந்து வந்த கருத்து வேறுபாடுகள் மறைந்து மகிழ்ச்சி நிலவும்.

### மகரம்

இதுவரை இருந்து வந்த குழப்பங்கள் நீங்கி, உற்சாகமான மனநிலை உண்டாகும். துணிவு, தன்னம்பிக்கை பிறக்கும். புதிய முயற்சிகள் அனுகூலமாகும். சுயமாகத் தொழில் செய்பவர்களுக்கு அதிர்ஷ்டமான போக்கு ஏற்படும். எதிர்பார்த்த நல்ல தகவல் வந்துசேரும்.

### கும்பம்

தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். அலுவல கத்தில் சுமுகமான சூழ்நிலை ஏற்படும். அலுவலகத்தில் இதுவரை இருந்த வந்த குழப்பம், எதிர்ப்புகள் மறையும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம். எதிர்பாராத பொருள் வரவு உண்டு.

### மீனம்

உற்சாகம் கரை புரளும். இருந்தாலும் செலவு எகிறும். பெண்களுக்கு உற்சாகமான மனநிலை அமையும். சினிமா, சங்கீதம், நடனம் ஆகிய துறைகளைச் சேர்ந்தவர்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு. கலை சம்பந்தமாக வெளிநாடு செல்லும் வாய்ப்பும் இருக்கிறது. அலுவலகத்தில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். பேச்சில் நிதானம் அவசியம்.

■ சுபா ■

# நான் வேண்டுமோ? 3

மடியில் படுத்திருந்த நிவேதனாவின் தலைமுடியை அவன் அன்புடன் கோதினான். டாக்ஸி டிரைவருக்கு வழி சொன்னான்.

நிவேதனாவின் வீட்டு வாசலில் டாக்ஸி நின்றது. அவளை அதிகம் கலைக்காமல் இறங்கினான். அவளுடைய ஹேண்ட்பாகிலிருந்து சாவியை சுவாதீனமாக எடுத்தான். வீட்டுக் கதவைத் திறந்தான். விளக்குகளைப் போட்டான்.

வீட்டிற்குள் நடத்திப் போகும் வழியில் ஒரு செருப்பு அவிழ்ந்தது. அவளைக் கட்டிலில் கிடத்தி அடுத்த செருப்பை அவனே அவிழ்த்தான். கால்களைச் சேர்த்து கட்டில் விளிம்பிற்குள் அடக்கினான். போர்த்தினான். மின்விசிறியைச் சுழல விட்டான். கிச்சனிலிருந்து பிஸ்கட் பாக்கெட்டும், தண்ணீர் பாட்டிலும் கொண்டு வந்து கைக்கெட்டும் தூரத்தில் வைத்தான். வீட்டுச் சாவியைப் பார்வை படும் இடத்தில் வைத்தான். பெரிய விளக்குகளை அணைத்தான்.

"குட் நைட்" என்றான்.

அவளிடமிருந்து பதில் இல்லை.

வீட்டிலிருந்து வெளியேறி கதவை இழுத்துச் சாத்தினான். தானியங்கிப் பூட்டு பூட்டிக் கொண்டது. கதவைத் தள்ளிப் பார்த்து திறக்காது என்று திருப்தியுற்றான். காத்திருந்த டாக்ஸியில் ஏறினான்.

"கிளப் வாசல்ல விட்டுருங்க. என் பைக் அங்கே இருக்கு."

நிவேதனாவுக்கு மண்டைக்குள் 'ஙம, ஙம' என்றொரு ரீங்காரம்.

'கண்ணம்மா, சாப்பிட வா' என்று மடியில் வைத்து ஊட்டி விடுவது யார்? அம்மாதானே? ஏய், நீ செத்துப் போய் விடவில்லை? எப்படி இங்கே வந்தாய்? அம்மா, உன் முகத்தைச் சரியாகக் காட்டேன். கையில் ஸ்டியரிங்கை வைத்து விளையாட்டு காட்டிக் கொண்டு, உன்னோடு யார் இது? என் அப்பாவா?

இரண்டு பேரும் மலைச் சரிவில் ஏன் குதிக்கிறீர்கள்?

திடுக்கென்று விழிப்பு வந்தது.

இமைகளைப் போராடித் திறந்தாள். மலையும், மேகங்களும் எங்கே? ஆகாயத்தில் மின்விசிறியை மாட்டி வைத்தது யார்?

பார்வையைத் திரட்டி சுடிகாரத்தைப் பார்த்தாள். மணி இரவு 3.30.

கைக்கெட்டும் தூரத்தில் பிஸ்கெட் பாக்கெட் தென்பட்டது. அள்ளிப் பிரித்து இரண்டிரண்டாகக் கடித்து, தண்ணீரை இறைத்துக் கொண்டாள்.

எனக்குப் பசிக்கும் என்று யோசித்து, யார் இதையெல்லாம் கொண்டு வந்து வைத்தது? வீட்டுக்குள் யார் கொண்டு வந்து விட்டது?

மெத்தென்ற மடியும், கார்ப் பயணமும், மசமசப்பாக நினைவுகளில் கலைந்தன.

மூளைக்குள் ஏக காலத்தில் நூறு கூட்ஸ் ரயில்கள் குறுக்கும் நெடுக்குமாய் ஓடின. ஒன்றுடன் ஒன்று மோதின. புரண்டன.

நெருப்புப் பிடித்துக் கொண்டன. எழுந்து மீண்டும் விரைந்தன. அப்படியே சுருண்டு படுத்தாள்.'

முட்டாள், உனக்கு ஒன்றும் ஆகவில்லை. ஒழுங்காய்த்தான் இருக்கிறாய்!

தலையணையில் முகத்தை நசுக்கிக் கொண்டாள். காரணம் புரியாமல் அழுதாள்.

'கடவுளே, ப்ளீஸ், எனக்குத் தூக்கம் கொடு. உன் மேல் சத்தியம். இனிமேல் ஜின் சாப்பிட மாட்டேன்.'

மல்லாக்கப் படுத்தாள். ஒருக்களித்துப் படுத்தாள். குப்புறப் படுத்தாள் போர்த்தினாள். விலக்கினாள்.

எப்போது தூங்கிப் போனாள்?

**கா**லை பத்து மணிக்கு தொலைபேசி விடாமல் அலறியபோது, சோபாவில் ஒடுங்கிப் படுத்திருந்தாள். வீடு பூரா வெளிச்சம்.



கடிகாரம் பார்த்துப் பதறினாள்.

"ஹாய், நிவேத்!"

போனில் தீபக்கின் குழைந்த குரல்.

"நீ இல்லாம ஆபீஸ் வெறிச்சுனு இருக்கு. என்னாச்சு? ஆர் யூ ஆல்ரைட்?"

"தலைவலி..." என்றாள். "தேங்க்ஸ், நைட்டு வீட்டுல கொண்டு வந்து விட்டதுக்கு"

"நீதான் வெயிட் பண்ணாம, நான் வரதுக்குள்ள டாக்ஸிலே ஏறிப் போயிட்டியே!"

"தீபக்... உங்க கார்ல நான் வரல்ல?"

"காட். அந்தளவுக்கு ஏறிடுச்சா? இன்னிக்கு ரெஸ்ட் எடுத்துக்க. ஆபீஸ் வர வேண்டாம்."

போனை பொம்மை போல் மெல்ல வைத்தாள்.

அழைப்புமணி ஒலித்தது.

உடைகளைச் சரி செய்து கொண்டாள்.

கதவுக்கு வெளியே அவன் நின்றிருந்தான். பளிச்சென்ற புன்னகை. ஒரு கையில் அவள் வீட்டு தினசரி. மறுகையில் பார்சல் கட்டிய டிபன்.

"குட் மார்னிங்."

"என்ன வேணும்?" அவள் முகத்தில் கடுமை.

"தூங்கினியா?"

"உனக்கு என்னடா வேணும்?"

அதற்கும் சிரிப்பு மாறாமல், "உன் இரண்டு செருப்பையும் அந்தக் கதவுக்குப் பின்னால விட்டிருக்கேன். தேடாதே" என்றான்.



"ஒருத்தர் வீட்ல தீபாவளி இனாம் கேட்கப் போயிருந்தேன். ரொம்ப நேரம் காக்க வைச்சு... கடைசியில வெறும் கையோடு அனுப்பிட்டாரு..."

"சரி... அதுக்கு என்ன இப்ப?"

"அவர் மேல கன்ஸ்யூமர் கோர்ட்ல வழக்குத் தொடர முடியுமுங்களா...?"

- பெ. கலாசாமி



இரும்புச் சாட்டையால் தீண்டப்பட்டவள் போல் விதிர்த்தாள்.

"நீ...நீ..."

"நான்தான் டாக்ஸில அழைச்சிட்டு வந்தேன்."

நிவேதனாவின் பார்வை நிலை கொள்ளாமல் தவித்தது. சட்டென்று நகர்ந்து அவன் உள்ளே வர வழி விட்டாள்.

"எழுந்தவுடனே பசிக்குமேன்னு வசந்த பவன்லேர்ந்து வாங்கிட்டு வந்தேன்."

சுவாதீனமாக நுழைந்து டைனிங் டேபிளில் சிற்றுண்டிப் பொட்டலத்தை வைத்தான்.

"நைட்டு என்ன நடந்தது? எதையும் மறைக்காம சொல்லு" நிவேதனா பரபரத்தாள்.

"குளிச்சிட்டு வா. சாப்பிட்டுக்கிட்டே பேசலாம்."

பதில் சொல்லாமல் ஆத்திரத்துடன் பூத்துவாலையை உருவி எடுத்துக் குளியலறைக்குள் மறைந்தாள்.

வாஷ்பேஸின் கண்ணாடியில் வலிக்க வலிக்க முதுகைத் திருப்பிப் பார்த்தபோது, நடுமுதுகில் அவன் சொன்ன அளவுக்கு கொட்டைப் பாக்கு மச்சம்.

அவன் அருகில் நின்று அங்கே தொட்டு விட்டது போல் விதிர்த்தாள்.

ராஸ்கல், பாத்ரூம் ஜன்னல் வழியே நோட்டமிடுபவனா இவன்?

குளித்துத் திரும்பியபோது, "நிவேதனா இன்னிக்கு ஆபீஸ் வர மாட்டாங்க" என்று அவளுடைய ஃபோனில் யாருக்கோ பதில் சொல்லிக் கொண்டிருந்தான்.

அவனைத் தடுக்க விரும்பாமல் எதிரே வந்து அமர்ந்தாள்.

கண்களைத் தவிர வேறெங்கும் பார்க்காமல் புன்னகை செய்தான்.

பொட்டலத்தைப் பிரித்தான். நியூஸ் பிரின்ட் காகிதம் ஈரத்தில் திரிந்து கிழிந்தது. வாழை இலைக் கிழிசலில் இட்லிகள். இன்னொரு துணுக்கு இலையில் தேங்காய்ச் சட்னி.

"இப்ப சொல்லு" என்றாள்.

"வாழ்க்கை மேல உனக்கு என்ன வெறுப்பு?" என்று பாலிதீனில் சிறைப்பட்டிருந்த சாம்பாரை அவள் இலையில் விடுதலை செய்தான்.

"இது என் வாழ்க்கை. உனக்கு

பதில் சொல்ல வேண்டிய அவசிய மில்ல!'

''நீ பெரிய பாடகியா வரணும்னு உங்கம்மா கனவு கண்டாங்க. இப்படி பார்ல தள்ளாடிச் சீரழியறதை எப்படித் தாங்குவாங்க?''

இட்லியைத் தாண்டி நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''எங்கம்மா பத்தி உனக்கு என்ன தெரியும்?''

அதிராத அதே புன்னகையைக் காட்டினான்.

"உனக்குத் தெரியாததெல்லாம் தெரியும்."

"சாவித் துவாரம் வழியாப் பாக்கறவனா நீ?"

புன்னகை தப்பவில்லை. "கூந்தலுக்குள்ள இருக்கற தையல் மார்க்கை சாவித் துவாரம் வழியாப் பார்க்க முடியற அளவுக்கு நான் முனிவர் இல்ல."

"அப்ப யார் நீ? எத்தனை தடவை கேக்க முடியும்?"

அவன் பாக்கெட்டிலிருந்து சிறு அட்டையை எடுத்து அவள் முன் வைத்தான்.

"நிஜமாவே தெரிஞ்சிக்கணும்னா, சாயந்திரம் எனக்கு ஃபோன் பண்ணு" என்று அவன் சாப்பிட்ட கிழிசல்களைத் திரட்டி எடுத்தான். பாத்ரூமுக்கு வெளியே இருந்த குப்பைத்தொட்டியின் பாதத்தை விரலால் அழுத்தினான். அது வாய் பிளந்ததும், அதில் போட்டான். கைகளைக் கழுவிக் கொண்டான்.

''ராஜ்குமார், நீ சுவாரஸ்யமாயிட்டிருக்கே" என்று எழுந்தாள்.

அவன் செருப்புகளை மாட்டிக் கொண்டபோது, ''தேங்க்ஸ்... வீட்டுல கொண்டு பத்திரமா சேர்த்ததுக்கு" என்று முதல் புன்னகையைக் காட்டினான்.

**டா**க்டர் வீட்டு பக்கெட் நாற்காலிகளில் மனிதர்கள் நிறைந்திருந்தார்கள். எலும்புக் கூட்டில் தோல் போர்த்திய தாத்தா. அரிசி மூட்டைக்கு கைகால் முளைத்தது போல் ஓர் அம்மணி. ஒட்டப்பட்டிருக்கும் டைபாய்டு பற்றிய ஸ்டிக்கரைப் பிய்க்கத் துடிக்கும் ஆறு வயதுப் பையன். அவனை அடக்கத் திணறும் அம்மா. லெதர் பைகளோடு, விறைத்த முதுகுகளுடன் மருந்துக் கம்பெனிகளின் பிரதிநிதிகள்.



''அமைச்சரே! கஜானாவை நிரப்ப வழி சொல்லுங்கள்!''

''இரவில் பிச்சைக்காரன் வேஷத்துல நகர் வலம் போய்ப் பாருங்கள் அரசே!''

- யமுனா ரெங்கநாதன்



அவளைப் பார்த்ததும் நர்ஸ் மலையாளத்தில் புன்னகைத்து உள்ளே தனியாக அழைத்துப் போனாள். அவள் கணவன் வளைகுடா போனபோது டிக்கெட்டில் கணிசமான கழிவு கொடுத்த நன்றி இன்னும் வேலை செய்தது.

உள்கதவு வழியே நிவேதனா அனுமதிக்கப்பட்டாள்.

"டாக்டரைக் கேக்காம கண்ட மருந்தையும் கரைச்சுக் குடிச்சா, இப்படித்தான் பிரசவத்துல சிக்கல் வரும்..." என்று படுத்திருந்த பெண்ணின் புடைவையை இழுத்து மூடிக்கொண்டே, டாக்டர் கிளவுஸ்களைக் கழற்றினாள். வெள்ளைத் தாளில் எழுதி, ஸ்கேன் பண்ணிக் கொண்டு வரச் சொல்லி அனுப்பி விட்டு, நிவேதனாவிடம் திரும்பினாள்.

"இப்பவும் இர்ரெகுலராத்தான் வருதா?"

"அதுக்காக வரல்ல, டாக்டர்."

"பின்னே?"

"பின் மண்டைல கூந்தலுக்குள்ள ஏதாவது தையல் அடையாளம் இருக்கான்னு பார்க்கணும்..."

அந்த வித்தியாசமான கோரிக்கையை டாக்டர் ரசித்ததாகத் தெரியவில்லை.

முடிகளைப் பிரிபிரியாக விலக்கி ஆராய்ந்து பார்த்து, "அட ஆமாம்" என்றாள்.

"கழுத்துக்கு நேர்மேல நடு மண்டையில ஒய் மாதிரி தையல் போட்ட தழும்பு இருக்கு... உன்னிப்பா கவனிக்கலைன்னா கண்ல தென்படாது.... தொட்டாக் கூடத் தெரிஞ்சிருக்காதே. எப்படிக் கண்டு பிடிச்சே?''

(தொடரும்)

# உரி மட்டை நெருப்பில்... ஊருக்கெல்லாம் முறுக்கு!



* பேருந்து நிலையத்தில்...



* உரிமட்டை நெருப்பில்...



* மாயாண்டித் தேவர்

குடிசையில் கூட மினி சிலிண்டரில், ஒற்றை பர்னர் ஸ்டவ் கொண்டு சமையல் எரிவாயுவில் சமைக்கிறார்கள். ஆனால் மணப்பாறை முறுக்கு வியாபாரிகள் இதுபோன்று நவீனங்களைத் தொடுவதில்லையாம். "அரிசிமாவை மின்சார உரல் கொண்டு இடித்துக் கொள்கிறோம்; அரைப்பதில்லை. அதே போல தேங்காய் உரி மட்டைகளை மட்டுமே அடுப்பெரிக்கப் பயன்படுத்துகிறோம். காரணம், வாணலியில் எண்ணெய் சூடு மிதமாக இருக்கணும். அப்போதான் முறுக்கு மொறுமொறுப்பாக இருக்கும். உரிமட்டை நெருப்பு இல்லேன்னா, மணப்பாறை முறுக்கு இல்லே!" என்கிறார் ஐம்பது ஆண்டுகளாக முறுக்கு வியாபாரம் செய்து வரும் மாயாண்டித் தேவர். ஆனால், "மணப்பாறை முறுக்கின் மொறுமொறு கரகர சுவைக்கு, அந்த ஊரின் மெல்லிய உப்புச் சுவை கொண்ட தண்ணீர்தான் காரணம்" என்கிறார்கள் வேறு பலர்.

மணப்பாறை முறுக்குகளைச் சுடுவதில் கைதேர்ந்த கெட்டிக்காரர்களாகத் திகழ்வது பெண்கள்தான். காரணம், இருபத்தைந்து பைசா முறுக்கு, ஐம்பது பைசா முறுக்கு உட்பட மிகச் சிறிய முறுக்குகளைப் பிழிந்து, சுடுவதற்குப் பொறுமை மிக அவசியம். அத்தனை பொறுமை ஆண்களுக்குக் கிடையாது.

மணப்பாறை வழியே பேருந்தில் செல்கிறவர்கள் கீழே இறங்கி முறுக்கு வாங்கி வர வேண்டிய அவசியமில்லை. கையில் முறுக்குக் கூடைகளோடு உங்களைச் சூழ்ந்து கொள்வார்கள் வியாபாரிகள். வாசனை பிடித்துவிட்டால் வாங்காமல் இருக்கவே முடியாது.

தகவல், படங்கள் : திரு

* டாக்டர் முகேஷ் பாத்ரா

டாக்டர் முகேஷ் பாத்ரா கடந்த முப்பது வருடங்களாக ஹோமியோபதி மருத்துவத்தில் வல்லுனர். 'பாஸிடிவ் ஹெல்த் கிளினிக்' நிறுவனத்தின் தலைவர்.

மும்பையில் 1982ல் செயல்படத் தொடங்கிய இந்த நிறுவனம் கம்ப்யூட்டர்களைப் பெருமளவு பயன்படுத்துகிறது என்கிற தகவல் ஏற்படுத்தாத வியப்பை, கணினியின் மூலமே டாக்டர் பாத்ராவும் அவரது குழுவும், நோய்களுக்குச் சிகிச்சை அளிக்கிறார்கள் என்கிற செய்தி ஏற்படுத்தியது. அதாவது



# 'நெட்' மூலம் குணமாகும் நோய்கள்!

'ஆன்லைன் மெடிஸன்'. எப்படி இது சாத்தியம் என்பதோடு, வேறு சில கேள்விகளும் எழுந்தன. டாக்டர் பாத்ராவிடம் கேட்டோம்.

"சென்ற வருடம் மட்டுமே எழுபத்தைந்து நாடுகளைச் சேர்ந்த 47,500 நோயாளிகள் தங்கள் பிரச்னைகளை நெட் மூலமாகவே எங்களுக்குத் தெரிவித்து, மருத்துவ ஆலோசனை பெற்றிருக்கிறார்கள்.

முதலில் ஒன்றைத் தெளிவாக்கி விடுகிறேன். நோயாளியை நேரில் பார்த்து சோதனை செய்து, மருத்துவ ஆலோசனை தருவதுதான் உத்தமமானது. அதற்கு ஒரு படி கீழேதான் இன்டர்நெட் மூலம் நாங்கள் செய்துவரும் இந்த மருத்துவப்பணி. நாங்கள் என்றால், நான் உள்ளிட்ட எங்கள் நிறுவனத்தைச் சேர்ந்த எழுபது டாக்டர்கள். ஆனால் மருத்துவ வசதிகள் எல்லா இடங்களிலும் இருப்பதில்லை. அதுவும் ஹோமியோபதி மருத்துவத்தை நாடுபவர்களுக்கு, அந்த வசதி தாங்கள் இருக்கும் பகுதியிலேயே கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

பெரும்பாலும் சரும வியாதிகள், தலைமயிர் விழுதல் போன்ற நோய்களுக்கும், நெடுநாட்களாகத் தீராத வியாதிகளுக்கும்தான் இந்த முறையில் ஆலோசனை கேட்கிறார்கள்."

டாக்டர் கூறக் கூற நமக்கு வேறொரு வியப்புக் கேள்வி. "அதாவது நோயாளிகள்

தாங்களாகச் சொல்லும் நோயின் விவரங்களை மட்டுமே கொண்டு நீங்கள் தீர்வு அளிப்பீர்களா?"

"ஒரு குறிப்பிட்ட வகை நோயால் பாதிக்கப்பட்டிருக்கிறார் என்பது தெரிந்தவுடனே, அது தொடர்பான ஒரு மருத்துவக் கேள்வித்தாள் திரையில் விரியும். அதில் காணப்படும் பல்வேறு கேள்விகளுக்கு நோயாளி கொடுக்கும் பதில்களைக் கொண்டே, நோயின் தன்மையை அனுமானிக்க முடியும். ஏதாவது பரிசோதனை செய்ய வேண்டுமென்றால் அவர்கள் இருக்கும் பகுதியிலேயே அந்தச் சோதனையைச் செய்து கொண்டு, சோதனை முடிவுகளை நெட் மூலமாகவே எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும்."

"ஃபீஸை வாங்கிக் கொள்வது எப்படி?" என்ற கேள்விக்கு "அதிலும் கவனமாக இருப்போம். கிரெடிட் கார்ட் வேறெதற்கு இருக்கிறது?" என்றார் புன்னகையுடன்.

கடந்த இருபது வருடங்களாக இது போன்ற வலைச் சிகிச்சையைச் செய்கிறார்களாம்.

**ஸ்**ட்ரெஸ் எனப்படும் மன இறுக்கத்துக்கு ஹோமியோபதி மருந்துகள் பெரிதும் பயன்படும் என்கிறார் டாக்டர் பாத்ரா. சொல்லப்போனால் நீரிழிவு நோய், சரும வியாதிகள் போன்றவைகூட, மன இறுக்கத்தின் காரணமாக உருவாகலாமாம். (மன இறுக்கத்தின்போது உடலில் எதிர்ப்புச்சக்தி குறைய, அதன் விளைவு பலவிதமாக வெளிப்படலாம் என்கிறார்.)

"வேலைச் சூழல், குடும்பம், தனி நபரின் குணநலம் இப்படிப் பல்வேறு காரணங்களினாலும் இன்றைய அவசர யுகத்தில் மன இறுக்கம் தோன்றுகிறது. ஓரளவுக்கு இது நல்லதுதான். அப்போதுதான் எடுத்த காரியத்தைக் குறித்த நேரத்தில் நல்ல முறையில் முடிப்போம். ஆனால் இதுவே அதிகமாகும் போது, உடல்நலத்தைப் பெரிதும் பாதிக்கிறது. யோகா, ஆழ்நிலை தியானம் போன்றவைகூட மன இறுக்கத்தை இந்தவிதத்தில்தான் குறைக்கின்றன.

**மி**கவும் பண்டைய வைத்தியமுறை என்பதால் ஹோமியோபதிக்கு தனி மகத்துவம் உண்டு. உடல் தொடர்பான பிரச்னைகளோடு மனநிலையும் கணக்கில் கொண்டே மருந்து அளிக்கப்படுகிறது. உதாரணமாக, இரண்டு பேருக்கு ஒரே மாதிரி சரும வியாதி இருக்கலாம். ஒருவர் இதன் காரணமாக மிகவும் மன இறுக்கத்தோடு ஸ்டிஃப்பாக இருக்கலாம். மற்றவர் இதன் காரணமாக அழுதுகொண்டே இருக்கலாம். இந்த இரண்டு பேருக்கும் இரண்டு வெவ்வேறு மருந்துகளைத்தான் நாங்கள் சிபாரிசு செய்வோம்."

நெட் மூலம் சிகிச்சையளித்ததில் ஏற்பட்ட இரண்டு வித்தியாசமான அனுபவங்களைக் கேட்டோம்.

"மூன்று வயதுச் சிறுவன் ஒருவன் தீவிர ஆஸ்துமாவால் பாதிக்கப்படுவதாக அவன் அம்மா கூறினாள். பல்வேறு கேள்விகளைக் கேட்ட பிறகுதான் உண்மை புரிந்தது. அவன் அப்பா வளைகுடா நாடுகளில் வேலை செய்பவர். அவர் நடுநடுவே இந்தியாவுக்கு வரும்போது பையனுக்கு ஆஸ்துமா இருப்பதில்லை. கிளம்பிச் சென்ற கொஞ்ச காலத்துக்கு மிகத் தீவிரமான ஆஸ்துமா. அதற்குப் பிறகு அவ்வப்போது அந்தத் தொல்லை. இதை அறிந்து கொண்ட பிறகு, தக்க மருந்துகளின் மூலம் அவனது உடல்நலத்தைச் சீர்படுத்த முடிந்தது.

வேறொருவர் தமது மனைவி அடிக்கடி மயக்கம் போட்டு விழுவதாகக் கூறினார். ஒரு வித வலிப்பு நோயோ என்ற பயம் கணவருக்கு. பலவிதக் கேள்விகளுக்குப் பிறகு, ஹிஸ்டீரியா காரணமாகத்தான் அவர் மயக்கம் போட்டு விழுந்தார் என்பதை அறிந்து கொண்டோம்.

அதாவது, அவரது கணவர் (தமது சகோதரர்கள் மற்றும் வியாபாரம் ஆகியவற்றையே பெரிதாகக் கருதி) மனைவியை அலட்சியம் செய்துவிட்டார். கணவனின் கவனத்தைக் கவர்வதற்காகவே அந்தப் பெண்மணி கூக்குரல், உடல் வலிப்பு, மயக்கம் என்று நடிக்கத் தொடங்க, உண்மையாகவே உடலும் கொஞ்சம் சீர்கெட்டது. தகுந்த மருந்து மற்றும் கணவரிடம் இது குறித்த ஆலோசனை ஆகியவற்றின் மூலம், அந்தப் பெண்மணியின் உடல் நிலையைக் கட்டுக்குள் கொண்டுவர முடிந்தது."

**- ஜி.எஸ்.எஸ்.**

---

''நீ கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவன்னு ஒத்துக்கிறேன். அதுக்காக 'ஹெச்' முத்திரை டீ ஷர்ட்டையே தினம் தினம் போட்டுக்கிட்டா எப்படி...!

- எஸ். மோகன்





**அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதை**

**வீ**ட்டுக்குள் பதினாலாவது முறையாக எட்டிப் பார்த்தார் கிழவர். மருமகள் வெளியே வருவதாகக் காணோம்.

வெளித் திண்ணையில் உட்கார்ந்தபடி எவ்வளவு நேரம்தான் வீதியையே வெறித்துக் கொண்டிருப்பது? கிழவருக்குப் பசி பகபக வென அடிவயிற்றை அரிக்கத் தொடங்கியது.

இன்னொரு முறை குரல் கொடுக்கலாமா என யோசித்தார். வேண்டாம். கத்துவாள்.

"எனக்கென்ன பத்துக்கையா இருக்கு? ஒவ்வொரு வேலையாத்தானே பாக்கணும். காலையில எழுந்திரிச்சதும் அப்படி என்ன தான் பசியோ? மனுசனைத் திங்கிற பசி" என்று எட்டு வீட்டுக்குக் கேட்கும்படிச் சத்தம் போடுவாள். அந்தப் பேச்சைக் கேட்பதை விடப் பசியைக் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளலாம்.

கொஞ்ச நேரம் தெருவையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, மீண்டும்

# தந்தையானவன்

**வடுவூர் சிவ.முரளி**

உள்ளே எட்டிப் பார்த்தார். எந்த அரவமும் இல்லை. என்னதான் செய்கிறாளோ?

குரல் கொடுக்க நினைத்துச் சற்றுக் கனைத்தார். குரலுக்குப் பதில் இருமல் வந்துவிட்டது. நாலைந்து நாட்களாக இப்படித்தான். இருமல் வந்தால் இரண்டு மூன்று நிமிடங்களுக்குக் கொட்டிக் குலைத்து விடுகிறது. தொண்டை காய்ந்து வறண்டு போய், கண்கள் தெறிப்பது போல் கலங்கி உயிர்போய் உயிர் வருகிறது.

உள்ளேயிருந்து அவரது பேரன் 'தத்தக்கா புத்தக்கா' என்று அடியெடுத்து வைத்து நடந்து வந்தான். நடக்கத் தொடங்கியதிலிருந்து ஓர் இடத்தில் இருப்பதில்லை. அவனைப் பார்க்கும் போதெல்லாம் கிழவருக்கு மகனின் சிறுவயது நடவடிக்கைகள்தான் நினைவுக்கு வரும். அப்படியே அப்பனை உரித்துக் கொண்டு பிறந்திருக்கிறான்.

பேரனை நோக்கிக் கை நீட்டினார். நெருங்கி வந்த அவன், அவர் இழுத்து அணைத்துக் கொள்ளப் போகையில் சிரித்துக் கொண்டே கைதட்டியபடி விலகி ஓடினான்.

அவன் விலகிப் போனதும் நல்லதுதான்.

"பச்சப்புள்ளையைத் தூக்கி மடியில வைச்சுக்கிட்டு லொக்கு லொக்குன்னு இருமிக்கிட்டிருக்கியே, அவனுக்கும் ஒட்டிக்காது? வயசாச்சே தவிர கொஞ்சம்கூட அறிவு கிடையாது" என்று மகன் திட்டுவான்.

**வா**சலில் ஸ்கூட்டர் வந்து நிற்கும் சப்தம்.

வாசலில் மாடுகளை வேடிக்கை பார்த்தபடி நின்று கொண்டிருந்த பையன் சிரித்துக் கொண்டே ஸ்கூட்டர் அருகே ஓடினான். "ப்பா..., ப்பா...!" என்று மழலையாய் கை நீட்டினான்.

முத்துமணி, மகனைத் தூக்கி இறுக அணைத்து முத்தமிட்டான்.

மருமகள் செல்வி கிண்ணத்தில் ஃபாரக்ஸ் கலந்து ஸ்பூனால் கிண்டிக் கொண்டே வெளியே வந்தாள்.

"என்ன இது? நீ அலட்சியமாக குழந்தையைத் தெருவுல விட்டுட்டு வீட்டுக்குள்ளே இருக்கே. ரோட்டில மாடு சீடு போய்க்கிட்டு இருக்கில்லே" என்று கடிந்து கொண்டான் முத்துமணி.

"என்னை என்ன பண்ணச் சொல்றீங்க? கொஞ்சம் அசந்தா வெளியே ஓடியாந்துடறான். துறுதுறுன்னு ஒரு இடத்துல இருக்கிறதில்லே. சரியான வாலு" என்று செல்லமாக அலுத்துக் கொண்டாள் அவள்.

முத்துமணி, மகனைத் தூக்கிக் கொண்டு வேடிக்கை காட்டியபடியே அங்கும் இங்கும் நடந்து கொண்டிருக்க, செல்வி அவர்கள் பின்னால் போய் உணவை ஊட்டிக் கொண்டிருந்தாள்.

'மணி என்ன இருக்கும்?' என்று யோசிக்கத் தொடங்கினார் கிழவர். இன்றைக்கென்னவோ கொஞ்சம் அதிகமாகவே பசிப்பது போலத் தோன்றியது.

**ஊ**ட்டி முடித்ததும் மகனை வாங்கிக் கொண்டு உள்ளே போனாள் செல்வி.

முத்துமணியும் கைகால் கழுவிக் கொண்டு பின்னாலே போனான்.

"சீக்கிரம் சாப்பாடு எடுத்து வை. சாப்பிட்டுட்டு வயலுக்குப் போகணும்" என்று அவசரப்படுத்தினான்.

செல்வி தட்டில் ஆவி பறக்கும் இட்லிகளை எடுத்து வைத்து சட்னி ஊற்றினாள். முத்துமணி சாப்பிடத் துவங்கியதும் பையன் அவனருகே வந்து உரசிக் கொண்டு நின்றான்.

"என்னடா கண்ணு, உனக்கும் இட்லி வேணுமா?" என்று கேட்டான் முத்துமணி.

"ஐயையோ. அவனுக்குக் குடுத்துடாதீங்க. சட்னி காரம். என் செல்லக்குட்டி தாங்காது" என்றாள் செல்வி.

"என் ராஜாக்குட்டி. நீ பெரிய பையனா

ஆன பிறகுதான் இட்லி சாப்பிடணுமாம். இப்ப சமர்த்தா போய் விளையாடு'' என்றான் முத்துமணி.

பையன் அதைப் புரிந்து கொண்டதைப் போல நகர்ந்து போய், அருகில் இருந்த ஸ்டூல்மீது கிடந்த பொருட்களை ஆராயத் தொடங்கினான்.

''மத்தியானம் சாப்பாடு குடுத்தனுப் பணுமா? வந்துடுவீங்களா?''

''குடுத்தனுப்ப வேண்டாம். நானே வந்துடறேன்'' என்று சொல்லிக் கொண்டே கொடியில் கிடந்த துண்டை எடுக்கப் போனவன், மகனிடமிருந்து வித்தியாசமான சப்தம் வருவதைக் கண்டான். பதறி ஓடிப் போய்த் தூக்கினான். பையன் திணறித் திணறி இருமினான். தொண்டைக்குள் ளிருந்து 'சுக் புக்' என்று சத்தம் வந்தது.

முத்துமணி பதற்றத்தோடு, "தம்பி, தம்பி" என்று அழைத்தபடியே குழந்தையை உலுக் கினான். பையனுக்குத் திணறல் அதிகமாகி, கண்களில் இருந்து கண்ணீர் கொட்டியது.

சப்தம் கேட்டு ஓடி வந்த செல்வி, "என் னங்க? என்னாச்சு?'' என்று தவித்தபடியே குழந்தையை வாங்கிக் கொண்டாள். "என்னங்க, குழந்தை எதையோ முழுங்கிட் டான் போலிருக்குங்க. தொண்டையிலே மாட்டி.. ஐயோ.. நான் என்ன பண்ணுவேன்" என்று பயத்துடன் அலறினாள்.

"செல்வி, குழந்தை கையிலிருந்த மோதிரத் தைக் காணுமே" என்றான் பதற்றத்துடன்.

''ஆமாங்க. அது கொஞ்சம் லூசா இருந்திச்சு. நான் நூல் சுத்திப் போடுவோம்னு சொன்னேன். நீங்கதான் அழுக்கு சேரும்னு வேணாம்னு சொன்னீங்க.'' என்றவள் ஏறக்குறைய அழத் தொடங்கிவிட்டாள்.

''என்னப்பா, என்னாச்சு? புள்ளைக்கு என்ன பண்ணுது?'' என்றார் கிழவர்.

'நீ கொஞ்ச நேரம் சும்மா வாயை மூடிக்கிட்டு இருக்கியா? மனுசன் படற அவஸ்தை தெரியாம நீ வேற தொண தொணன்னு உயிரை வாங்கறியே. போய்த் திண்ணையில விழுந்து கிட'' என்று கோபத் துடன் அதட்டிய முத்துமணி, அவசரம் அவ சரமாக ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான். செல்வி குழந்தையை மார்போடு அணைத்த படி பின்னால் ஏறிக் கொண்டாள்.

கிழவர் ஒன்றும் புரியாதவராகத் திகைத் துப் போய் நின்றார்.

சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பின்னர் இரண்டு பேரும் குழந்தையோடு திரும் பினார்கள். இப்போது அவர்கள் முகத்தில் நிம்மதி.

"நான் ரொம்ப பயந்து போய்ட்டேன். நல்லவேளை, ஒண்ணும் ஆபத்து இல்லாமப் போச்சு" என்றபடியே ஸ்கூட்டரை விட்டு இறங்கினாள் செல்வி.

''நானும்தான். கதிகலங்கிட்டேன். டாக்டர் ஈஸியா எடுத்துட்டாரே'' என்று சொல்லிக் கொண்டே ஸ்கூட்டரை நிறுத்தி விட்டு வந்தான் முத்துமணி.

கிழவர் இப்போது மிகவும் தணிந்த குரலில், "தம்பி, என்னப்பா ஆச்சு?'' என்று கேட்டார். அவரது தோற்றமும் கேட்ட விதமும் பரிதாபமாக இருந்தன.

"பையன் மோதிரத்தை விழுங்கிட்டான். அதான் டாக்டர்கிட்ட கொண்டு போய்க் காட்டிட்டு வர்றோம். நாங்க அவசரமா கிளம்பிக்கிட்டு இருக்கும்போது, நீ கால நேரம் தெரியாம கேள்வி கேக்கிறே. கொஞ்சமாவது ஆத்திரம் அவசரம் புரியுதா உனக்கு?'' என்று சற்றுக் கோபமாகவே கேட்டான் முத்துமணி.

கிழவர் மகனை ஏற இறங்கப் பார்த்தார். ''உன்கிட்ட வண்டி இருக்கு. உள்ளூர்ல டாக்டரும் இருக்காரு. நீ உடனே கொண்டு போய்க் காட்டிட்டு வந்துட்டே. இந்த மாதிரி நீ காசை முழுங்கினப்ப, நான் உன்னைத் தோள்ல தூக்கிப் போட்டுக்கிட்டு ஆறு மைல் தூரம் கல்லுலேயும் முள்ளுலேயும் ஓடினேன் தெரியுமா?'' என்று கேட்டபோது கிழவரின் குரல் இலேசாக நடுங்கியது. ●




"'இம்மென்றால் எஸ்மா ஏனென்றால் டெஸ்மா'ங்கிற என் கட்டுரையை ஏன் ஸார் பிரசுரிக்க மாட்டேங்கறீங்க?"

"பொடாவில் உள்ளே போக எனக்கு விருப்பமில்லாததால்தான்!"

- உ. ராஜாஜி

# ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி நாளில் "ஆன்மீகம்" தெய்வீக மாதஇதழும்

# ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா அவர்களும் இணைந்து நடத்தும்,

## அன்பர்கள் இஷ்டப்படும் ஹோம பூஜையில், நேரிலேயே கலந்து கொள்ளும் வாய்ப்பு !

**பேரன்புடையீர், வணக்கம் !** எடுத்த முயற்சிகள் வெற்றியடையவும், சங்கடங்களின்றி சந்தோஷமாக வாழவும், செய்தொழிலில் லாபம் பெறவும், மகப்பேறு பெற்று மகிழவும், திருமணத்தடைகள் நீங்கி, குதூகலம் பெறவும், கடன் தொல்லையிலிருந்து விடுபடவும், பிள்ளைகள் கல்வியில் முதல் நிலை பெறவும், தீராத நோய்களிலிருந்து நிவாரணம் பெறவும், நவகிரஹ தோஷங்களிலிருந்து விலகி நலம் பெறவும், பிரிந்த குடும்பத்தினரும், தம்பதியினரும் ஒன்று சேரவும், உத்தியோகம் மற்றும் அயல்நாடு செல்லவும் நினைக்கும் ஒவ்வொருவருக்காகவும், **மாதா மாதம் பௌர்ணமி அன்று திருவல்லிக்கேணியில் சகல ஐஸ்வர்யங்களும் கிடைக்கவேண்டி, காலை 06.00 முதல் 10.00 வரை "ஆன்மீகம்" தெய்வீக மாத இதழ்** சார்பாக கீழ் கண்ட விவரப்படி சிறப்பான ஹோமங்களை நடத்தவிருக்கிறோம்.

## 08.11.03. சனி – செல்வம் பெருக – ஸ்ரீ லக்ஷ்மி குபேர ஹோமம்

குபேரன் என்பவர் நவநிதிகளுடன் கூடியவர் மேலும் **சங்க நிதி, பதுமநிதி** போன்ற விசேஷ நிதிகளையும் உடையவர். ஆதலால் வற்றாத செல்வமும், மஹாலட்சுமியின் திருவருளும் கைவரப் பெற்றவர். இவர் இராவணனுக்கு சகோதரன் முறை ஆவார். யக்ஷர்களுக்கு தலைவராக விளங்கும் இவர் வடதிசையின் அதிபதி ஆவார். குபேர பூஜை செய்யும் போது குபேர யந்திரத்தையும் வைத்து பூஜித்தால் எல்லா விஷயங்களும் வெற்றிகரமாக முடிந்து அஷ்ட ஐஸ்வர்யங்களும் தேடிவரும். ஐப்பசி மாதத்தில் வரும் பௌர்ணமியன்று நடைபெறும் **ஸ்ரீ லக்ஷ்மி குபேர பூஜையில்** கலந்து கொள்வதன் பலனாக வறுமையால் வாடுபவர்கள் அந்த நிலை மாறி சகல சௌபாக்கியங்களையும் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருவார்கள். இத்தகைய குபேரருக்கான **ஸ்ரீ லக்ஷ்மி குபேர ஹோமத்தில்** கலந்து கொள்வதன் மூலம் திருமகளாம் லக்ஷ்மியின் திருவருளால் இல்லங்களில் செல்வம் கொழிக்கும். செழிப்பு மிகுந்து காணப்படும்.

| மாதம் | தேதி | கிழமை | நோக்கம் | ஹோமம் |
|---|---|---|---|---|
| ஐப்பசி | 08.11.03 | சனி | செல்வம் பெருக | ஸ்ரீ லக்ஷ்மி குபேர ஹோமம் |
| கார்த்திகை | 08.12.03 | திங்கள் | நவகிரஹ ப்ரீதி உண்டாக | ஸ்ரீ நவகிரஹ ஜெயாதி ஹோமம் |
| மார்கழி | 07.01.04 | புதன் | சகல காரியம் ஜெயப்ரதம் உண்டாக | ஸ்ரீ மஹாபீம பூஜையும், வாயு ஸூக்த ஹோமமும் |
| தை | 06.02.04 | வெள்ளி | திருமண பாக்கியம் கை கூடி வர | ஸ்ரீ ஸ்வயம்வரகலா பார்வதி ஹோமம் |
| மாசி | 06.03.04 | சனி | வீடு அலுவலகம் வாஸ்து தோஷங்கள் விலக | ஸ்ரீ வாஸ்து ஹோமம் |
| பங்குனி | 05.04.04 | திங்கள் | வழக்கு வியாஜ்யங்களில் வெற்றிகிட்ட | ஸ்ரீ ஸூக்த ஜெயாதி ஹோமம் |
| சித்திரை | சித்ரா பௌர்ணமியன்று | | செய்வினை விலக | ஸ்ரீ ஸுதர்ஸன ஹோமம் |
| வைகாசி | வைகாசி விசாக பௌர்ணமியன்று | | கல்வி செல்வம் உண்டாக | ஸ்ரீ நீல சரஸ்வதி ஹோமம் |
| ஆனி | ஆனி பௌர்ணமியன்று | | தடைகள் அனைத்தும் விலக | ஸ்ரீ ராஜ கணபதி மஹாமந்த்ர ஹோமம் |
| ஆடி | ஆடி பௌர்ணமியன்று | | நினைத்தகாரியங்கள் சித்தியாக | ஸ்ரீ துர்கா ஸூக்த - பஞ்ச ஸூக்த ஹோமம் |
| ஆவணி | ஆவணி பௌர்ணமியன்று | | தீராத வியாதிகள் விலக | ஸ்ரீ தன்வந்திரி ஹோமம் |
| புரட்டாசி | புரட்டாசி பௌர்ணமியன்று | | சத்ரு பயம் விலக | ஸ்ரீ நரஸிம்ம ஸுதர்சன ஹோமம் |

**ஜோதிட சாஸ்த்திரசிம்மம், வாஸ்து சாஸ்த்திர விற்பன்னர், யோக ஆஞ்சநேய சக்தி பீடாதிபதி பூஜ்யஸ்ரீ ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா அவர்களின் தலைமையில், வேத சாஸ்திரங்களில் பாண்டித்யம் பெற்ற வித்வான்களைக்கொண்டு, ஸ்ரீ யோக ஆஞ்சநேயர் சக்தி பீடம், 177 / 84, வெங்கட்ரங்கம் பிள்ளைத்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5ல் சிறப்பு ஹோமங்கள் மேற்கண்ட விவரப்படி ஒவ்வொரு மாதங்களிலும் நடைபெற இருக்கின்றன.**

மேலே குறிப்பிட்டுள்ள ஒவ்வொரு மாதங்களில் நடைபெறும் ஒரு ஹோமத்தில் பங்குபெற கட்டணம் ரூ. 500- எல்லா ஹோமங்களிலும் பங்கு பெறவும், முன்பதிவு செய்யவும் கட்டணம் ரூ. 4500, செலுத்தி, நேரில் கலந்து கொள்ளலாம். நேரில் கலந்துகொள்ள இயலாதவர்கள் பெயர், நட்சத்திரம், இராசி, கோத்ரம் முதலியவைகளைக் குறிப்பிட்டு, என்ன பரிகாரத்திற்காக ஹோமம் செய்ய வேண்டும் என்பதையும், தங்களது விலாசத்தையும் எழுதி அனுப்பவும். பிரசாதங்கள் தபால்மூலம் அனுப்பப்படும்.

**வைகானச தர்ம சாஸ்திரம், ஜோதிடம், வாஸ்து என ஒரு கோடியே 25 லட்சம் கிரந்தங்களை எழுதியவரும் ப்ருகு, அத்ரி, காஸ்யபர், மரீசி ஆகிய மகரிஷிகளுக்கும் குருவானவருமான 'ஸ்ரீ விகநஸ மஹரிஷி' யின் அபூர்வ புகைப்படத்துடன் ஹோமத்தில் வைத்து பூஜிக்கப்பட்ட அட்சதை, மஞ்சள் ரட்சை, குங்குமம், ஹோம பஸ்பம், 3x3 கனத்த செம்புத் தகட்டினாலான யந்திரத்துடன் வெள்ளியால் செய்யப்பட்ட லக்ஷ்மி டாலரும் மஹாஹோமத்தில் பங்குபெறுபவர்களுக்கு பிரசாதமாக வழங்கப்படும்.**

**ஸ்ரீ விகநஸ மஹரிஷியின் பூஜிக்கப்பட்ட படம், இருக்கும் வீடுகளிலோ, அலுவலகங்களிலோ எந்த விதமான தோஷங்களும் அண்டாது என்பது உறுதி.**

எடுத்த முயற்சிகளில் வெற்றிகளை உண்டாக்கும் ஹோமத்திற்காக 'Homadharisanam' எனும் பெயரில் ரூ. 500/ அல்லது ரூ. 4500, - Cheque/D.D./M.O. மூலம் அனுப்ப வேண்டிய முகவரி

# ஹோம தரிசனம்

68, நடுத்தெரு, (ஸ்ரீ காபாலீசுவரர் கோயில் அருகில்) மயிலாப்பூர், சென்னை - 4.
Tel : 2461 6466, Fax : 044-5206 6525. E-mail:siva siva @ vsnl.net

ஹோமத்தின் மூலம் தெய்வத்தை ப்ரீதி செய்து வேண்டியதை நிறைவேற்றிக் கொள்வதும் ஒரு சிறந்த வழி !

**ம**தன் பாப்பிடம் வாசகர் பாஸூ அனுப்பிய அன்றாட வாழ்க்கைக்கு மிகவும் உபயோகமான புதிய யோகாசன ஐடியாக்களைத் தந்து செய்து காட்டச் சொன்னோம். 'பகபக'வென்று



சிரித்து விட்டு 'ஐடியா எல்லாம் சூப்பரா இருக்கே' என்று பாராட்டினார்.

### கால் பலகை ஆசனம்

**செய்முறை :** உடைந்த பலகை ஒன்றை எடுத்து ஜன்னலின் அருகே வைக்கவும். ஒரு காலை அந்தப் பலகையிலும், மற்றொரு காலைத் தரையிலும் வைத்து ஒரு கையால் ஜன்னல் கம்பியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, மற்றொரு கையைத் தொங்க விட்டு வாயால் 'புஸ் புஸ்'ஸென மூச்சு விடவும்.

**பலன் :** இந்த ஆசனத்தை தினமும் ஐந்து முறை செய்தால் எத்தனை கூட்டமான பஸ் வந்தாலும் எளிதாக ஃபுட் போர்ட் பிரயாணம் செய்ய நம் உடல் பழக்கப்பட்டு விடும்.

### காவடி ஆசனம்

**செய்முறை :** இரண்டு பிளாஸ்டிக் குடங்களில் மணலை நிரப்பி, அந்த குடங்களை தாம்புக் கயிறால் கட்டவும். கழுத்தில் மாட்டிக் கொண்டு நூறு அடி நடக்கவும். திணறியபடி மூச்சு விடலாம்.



**பலன் :** இந்த ஆசனத்தைத் தொடர்ந்து செய்பவர்கள் கடுமையான கோடை நாட்க

# ஆசனம் செய்கிறார் மதன்பாப்!



ளில் ஊர்க் கோடியில் இருக்கும் பைப்பு களிலிருந்து மிக எளிதாக தண்ணீர்க் குடங்களைச் சுமந்து வரலாம்.

**நடை ஆசனம்**

**செய்முறை :** நின்று கொண்டு இரு கைகளையும் பக்கவாட்டில் வைத்துக் கொள்ளவும். தலையை நிமிர்த்தி விறைப் பாகத் தான் நிற்க வேண்டும் என்பது கட்டாயமல்ல. அவரது இஷ்டப்படி தலையைக் குனிந்தபடியோ, கூன் போட்ட படியோ நின்று கொள்ளலாம். பிறகு பத்து நிமிஷத்திற்கு ஒரு முறை ஒரு ஒரு காலாக முன்னே வைத்தபடி மெ....து வாக முன்னேறவும். அவ்வப்போது பெருமூச்சு விட்டுக் கொள்ளவும்.

**பலன் :** இது ரேஷன் கடை க்யூ. ரயில்வே

ரிசர்வேஷன் கவுண்டர், பாஸ்போர்ட் ஆபீஸ் க்யூ, இத்யாதி இத்யாதிகளில் நிற்பதற்கான துணிவையும், பொறுமையையும் தரும்.



**பலன்** : பஸ் ஸ்டாண்ட், ரயில்வே ஸ்டேஷன் மற்றும் பொது இடங்களில் சீரியஸாக யாராவது பேப்பர் படிக்கும்போது, இந்த ஆசனம் தெரிந்தவர் குனிந்து வளைந்து பின் பக்க, முன் பக்கச் செய்திகளை ஓசியில் படித்து விடலாம்.

## தஞ்சாவூர் தலையாட்டி ஆசனம்

**செய்முறை** : முகத்தை உக்கிரமாக வைத்துக் கொள்ளவும். பிறகு கழுத்தை இடது புறத்திலிருந்து வலது புறமாகவும், வலமிருந்து இடமாகவும் வேகமாகத் திருப்பவும். மூச்சை உஷ்ணமாக வெளியேற்றவும்.

**பலன்** : நேரம் காலம் தெரியாமல் 'அப்பளம் வேணுமா, ஊது வத்தி, பினாயில் வேணுமா, வாட்டர் பியூரி ஃபையர் வேணுமா?' என்று கேட்டு மல்லுக்கு நிற்கும் மன உறுதி படைத்த சேல்ஸ்மென் வரும் சமயம் இதைச் செய்தால், அதிஅற்புதப் பலன் இருப்பதாக வீட்டிலிருக்கும் தாய்மார்களும், ரிடையரான தந்தைமார்களும் கூறுகின்றனர்.

## வௌவால் ஆசனம்

**செய்முறை** : கால்களை தரையில் ஊன்றியபடியே தலையை மட்டும் ஒரு பக்கமாக சாய்த்து கண்களை அகல விரித்துப் பார்க்கவும்.



## மாசு கட்டுப்பாடு மூச்சுப் பயிற்சி

**செய்முறை** : மூச்சை ஒரு முறை நன்கு இழுத்துவிட்டு பிறகு பத்து நிமிஷங்கள் கழித்து வெளிவிட வேண்டும். (முக்கியக் குறிப்பு : அவ்வப்போது உயிர் இருக்கிறதா என அறிய பல்ஸைப் பார்த்துக் கொள்ளவும்)

**பலன்** : கூவம் போன்ற நதிகளைக் கடக்கும்போதும், அதிக போக்குவரத்து நெரிசல் மிக்க சாலைகளின் வாகனப் புகையிலிருந்து விடுபடவும் இப்பயிற்சி கைகொடுக்கும்.

## சர்வ கட்சி முத்திரை

**செய்முறை** : வலது கையை முகத்துக்கு நேரே நீட்டி பிறகு எல்லா விரல்களையும் விரிக்கவும். பிறகு சேர்த்து வைத்துக் கொள்ளவும். பிறகு கட்டை விரல் மற்றும் சுண்டு விரலை மட்டும் மடக்கவும். பிறகு மோதிர விரலையும் மடக்கி விடவும்.

**பலன்** : நீங்கள் அரசியல் பேசும் உங்கள் நண்பர்களிடையே அடிக்கடி இந்த முத்திரையைச் செய்தால் அவர்களால் நீங்கள் எந்தக் கட்சி என்று கண்டு பிடிக்கவே முடியாது.

"நானும் ஒரு ஆசனம் சொல்லித் தருகிறேன். குறிப்பாக சினிமா, டி.வி. கலைஞர்களுக்கு, வரவேண்டிய பேமென்ட் வராத போது, இந்த யோகாசனத்தை முயற்சி செய்தால் பலன் கிடைக்கும். தலைகீழாய் நிற்பதற்கு பதில், இது தலைகீழ் பத்மாசனம்!" என்றார் மதன் பாப் சீரியஸாக!

ஏற்பாடு : **கௌதம் ராம்**

படங்கள் : **கிளிக் ரவி**

# கிண்டிக்கு முன் திருச்சி!



### குதிரை ரேஸ்!

தமிழ்நாட்டில் முதன் முதவில் திருச்சியில் தான் குதிரைப் பந்தயம் நடந்தது. 1894ம் ஆண்டு அதைத் தொடங்கி வைத்தவர் புதுக்கோட்டை மன்னர். அதன் பின்தான் 1895ம் ஆண்டு சென்னை கிண்டியில் குதிரைப் பந்தயம் தொடங்கப் பெற்றது.

### சுருட்டோ சுருட்டு!

உறையூர் சுருட்டு உலகப் புகழ் பெற்றது. இங்கிலாந்து பிரதமராக இருந்த சர்ச்சில் உறையூர் சுருட்டைத்தான் விரும்பிப் புகைப்பார்.

- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

### வெள்ளத்தை அடைத்த யானைகள்!

கி.பி. 1710. தஞ்சையை மராட்டிய மன்னர்களும், திருச்சியை நாயக்க வம்சத்தினரும் ஆண்டு வந்த காலம். இரு மன்னர்களுக்கிடையேயும் அவ்வப்போது எல்லைத் தாவா காரணங்களால் சண்டைகள் நடந்திருக்கின்றன. ஒரு சமயம் திருச்சியை ஆண்ட நாயக்க மன்னன் தஞ்சையின் செழிப்பின் மீது பொறாமை கொண்டு, புதுவிதமான போரைத் துவக்கினான். அவன் வசமிருந்த காவிரியாற்றின் கல்லணையில் இருந்த எல்லா மதகுகளையும் ஒரே நேரத்தில் திறந்து விட்டு, தஞ்சையின் கரையோரக் கிராமங்களுக்குப் பெருத்த சேதத்தை ஏற்படுத்தினான். இதையறிந்த தஞ்சை மராட்டிய மன்னன் தன் படையிலிருந்த யானைகளைக் கல்லணைக்குக் கொண்டு சென்று, அவற்றைப் பெரும் சிரமத்துடன் பெருகி வரும் வெள்ளத்தின் குறுக்கே சுவர் போல் தடுத்து நிறுத்தியும், யானைகளைக் கொண்டு மணல் மூட்டைகளை நீரில் போட்டுத் தடுத்தும் கரையோரக் கிராமங்களைப் பெரும் அழிவிலிருந்து காப்பாற்றினாராம்.

- ம.வி.அருண்மொழி தேவன், திருச்சி

### தோஷங்களைப் போக்கும் பஞ்சமுக விநாயகர்

பிரமன், சிவன், விஷ்ணு ஆகிய மும்மூர்த்தி தெய்வங்கள் இருக்கும் ஒரே இடமான திருச்சி உத்தமர்கோவில் அருகில், பிச்சாண்டார் கோவிலில் பஞ்சமுக விநாயகர் திருக்கோவில் உள்ளது.

இத்திருக்கோவிலில் பஞ்சமுக விநாயகர் ஐந்து முகங்களுடன், பத்து திருக்கைகளுடன், சிம்ம வாகனத்தில் (தாயின் மடியில்) சுமார் ஐந்தடி உயரத்தில் அமர்ந்து காட்சி அளிக்கிறார். பஞ்சமுக விநாயகருக்கு முன் பக்கம் மூன்று திசைகளில் நான்கு முகங்கள். மற்றொரு முகம், பின் திசையில். தன்னைத் தரிசிக்க வருபவர்களுக்கு நான்கு திசைகளிலிருந்தும் வரும் துன்பங்களை அகற்றுகிறார்.

பஞ்சமுக விநாயகரைத் தரிசித்தால் நவகிரஹங்களையும், தரிசித்ததற்குரிய பலன் என்றும், மேலும் இவர் தாயின் அவதாரமான சிங்கத்தின் மடியில் அமர்ந்துள்ளதால், சிவன் - பார்வதியை தரிசித்ததற்குரிய பலனும் உண்டாகும்.

- ஆ. சண்முகசுந்தர், திருச்சி





# 19

அதிகாலை மூன்று மணிக்கு அலாரம் வைத்து எழுப்பிவிட்டாள் அம்மா. கொதிக்கக் கொதிக்க வெந்நீர் போட்டுக் குளித்ததில் ஜக்குவுக்குக் கண்கள் எரிந்தன. தீபாவளி ஒரு நாளைத் தவிர வேறெப்போதும் இப்படி இருட்டோடு எழுந்து குளித்ததில்லை. கல்விச் சுற்றுலா. சீர்காழி, சிதம்பரம், கங்கை கொண்ட சோழபுரம். ஒரே நாளில் கூடப் போய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்துவிடலாம். ஆனால் பயன் அதிகம் இருக்காது என்று தலைமை ஆசிரியர் சொல்லியிருந்தார். ஒவ்வொரு இடத்திலும் பையன்கள் குறைந்தது மூன்று மணி நேரமாவது செலவழித்தால்தான், ஓரளவாவது விவரங்களை அறிந்து கொள்ள முடியும். தவிர, இந்தச் சுற்றுலா என்பது மூன்று நாள் குதூகலத்துடன் முடிந்து விடப்போவதில்லை. திரும்பி வந்ததும் எல்லாரும் கட்டுரை எழுத வேண்டும். சரித்திரம் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சி ஒன்றும் ஏற்பாடாகியிருக்கிறது. ஒரு மாறுதலுக்குப் பிரபல சரித்திரக் கதாசிரியர் ஒருவர் சிறப்பு விருந்தினராக வரும் வாரம் பள்ளிக்கு வருகை தரச் சம்மதித்திருக்கிறார்.

எல்லாமே சுவாரசியமான விஷயங்கள் தான். மெட்ரிகுலேஷன் பள்ளியில், இப்படியொரு சரித்திரச் சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்வதுகூட அநேகமாக இதுவே முதல் முறையாக இருக்கும், என்று நிறையப் பேர் பேசிக் கொண்டார்கள். சரித்திரமும் தமிழும் வாழ்க்கைக்கு உதவாது என்று தினசரி தியானமாக அறிவித்துக் கொண்டிருந்த பழைய ஆறாம் வகுப்பு ஆசிரியர் இப்போது பள்ளிக்கூடத்தில்

# மெல்லினம்

**■ பா.ராகவன் ■**

இல்லை. வாழ்க்கைக்கு உதவும் பாடங்களை நடத்துவதற்காக, அவர் வேறு பள்ளிக்குப் போய்விட்டிருந்தார்.

'ஜாக்கிரதை ஜக்கு. ஜன்னலோரமே எப்பவும் உக்காராதே. பனிக்காத்து படாம பார்த்துக்கோ. சமத்தா வாத்தியாரோட கூடவே எப்பவும் இரு. ஆறு, குளம்னு போனா கரையில் இருந்து பாரு. இறங்காதே. வேளைக்கு சமர்த்தா சாப்பிடு. பையிலே ஸ்நாக்ஸ் வைச்சிருக்கேன். கண்ட இடத்துலே எதுவும் வாங்கித் தின்னாதே. கோயில்களுக்குப் போகும்போது பிரதட்சிணம் பண்ண மறக்காதே!'

அம்மாவும் அறிவுரைகளும், எதற்கும் இருக்கட்டும் என்று ஆசிரியரிடம் கொடுத்த பணத்தைத் தவிர, அவனிடமும் ஐம்பது ரூபாய்களை அவள் கொடுத்திருந்தாள். காசைக் கரியாக்கத் தெரியாத குழந்தைகளிடம் எத்தனை கொடுத்து வைத்தாலும் தப்பில்லை. உற்சாகமாகத்தான் இருந்தது. முதல் முதலாக அப்பாவும் அம்மாவும் உடன் வராமல், அவன் தனியாகக் கிளம்புகிற பயணம். ஆசிரியர்கள் ஒவ்வொருவரிடமும் அழைத்துப் போய், 'கொஞ்சம் பார்த்துக்கோங்க சார்' என்று சொன்னதை மட்டும் அப்பா தவிர்த்திருக்கலாம் என்று தோன்றியது. ஆனாலும் பாதகமில்லை. எல்லா அப்பாக்களுமே அப்படித்தான் இருக்கிறார்கள். எல்லாக் குழந்தைகளையும் ஒன்றே போலத்தான் ஆசிரியர்களும் பார்த்துக் கொள்ளப் போகிறார்கள். 'அங்கே நிற்காதே. அங்கே நடக்காதே. எட்டிப் பார்க்காதே. வரிசையில் வா!'

ஜக்கு பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும் மாலுவும் குமாரும் ஜன்னலுக்கு வெளியே வந்து நின்றுகொண்டார்கள். 'ஜாக்கிரதை, ஜாக்கிரதை' என்று பலமுறை சொல்லிக் கொண்டே இருந்தார்கள். ஜக்குவுக்கும் அலுப்பாகவும் ஆச்சர்யமாகவும் இருந்தது. எத்தனை அன்பாகவும் அக்கறையாகவும் இருக்கிறார் இந்த அப்பா! இவர் போய் எப்படி அந்த நிர்மலாவை லவ் பண்ணியிருக்க முடியும்? ஒரு நிர்மலாவை லவ் பண்ணியவரால், எப்படித் தன்னிடமும் அம்மாவிடமும் கூட மாறாத அன்புடன் எப்போதும் நடந்து கொள்ள முடிகிறது? ஒருவேளை அந்த டைரியில் இருந்த விஷயங்கள் எல்லாமே ஏதாவது கதையில் இடம் பெறுகிற சில பகுதிகளோ? அல்லது எங்கேயாவது மேட்டருக்குப் போன இடத்தில் கிடைத்த கதையைத்தான் அப்பா எழுதி வைத்திருக்கிறாரோ?

"போடா மக்கு" என்று மெல்லிய குரலில் சிறியது விக்கி.

"வந்துட்டியா நீ?"

"ராத்திரியே வந்து இந்த சீட்டுக்கு அடியிலே உக்காந்துண்டுட்டேன். குளிருக்கு ஜோரா, இதமா இருக்கு. பின் பக்கத்து ஜன்னல் கொஞ்சம் ஓட்டை போல இருக்கு. காத்து சுர்ர்னு வருது" என்றது அது.

டிரைவர் ஏறி உட்கார்ந்து வண்டியை ஸ்டார்ட் செய்ததும், ஜக்கு ஜன்னலுக்கு வெளியே அம்மாவைப் பார்த்துக் கையாட்டினான். மெதுவாக நகரத் தொடங்கிய வண்டியின் கூடவே பத்தடி ஓடி வந்து, அவன் கையை விடாமல் பற்றிக் கொண்டு 'ஜாக்கிரதைடா செல்லம்' என்ற அப்பாவை நினைத்தால், ஏனோ அவனுக்குக் குப்பென்று அழுகை வந்தது. பேசாமல் வண்டியைவிட்டு இறங்கி வீட்டுக்கே போய்விடலாமா என்றுகூடத் தோன்றியது. இப்படித்

தனியாக இதுவரை அவன் எங்குமே போனதில்லை. அப்பாமேல் கோபம் கோபமாக வந்தாலும், அவர் பக்கத்தில் இருந்தபடிதான் தன்னால் கோபப்படக் கூட முடியும் என்று அவன் நினைத்தான்.

பேருந்தினுள் உற்சாகம் கரைபுரண்டு கொண்டிருந்தது. இரண்டு பேருந்துகள். ஒன்றை ஒன்று முந்துகிற போட்டி. 'ஓ, ஓ' என்று புறப்படுகிற குதூகலக் குரல்கள். ஒரு மாறுதலுக்குக் கையில் ஸ்கேல் வைத்திராத வாத்தியார்களும் டீச்சர்களும், சந்திரா டீச்சர் வயலட் புடைவை கட்டியிருந்ததை ஜக்கு பார்த்தான். ஏன் பெண்களுக்கு வயலட் என்றால் ரொம்பப் பிடிக்கிறது? தன் பார்வையில் படுகிற பெரும்பாலான பெண்கள், வயலட் புடைவை தாம் அணிந்து கொண்டிருப்பதாக அப்போது அவனுக்குத் தோன்றியது. மேட்டுத்தெரு நிர்மலாவும் வயலட் புடைவை அணிகிறவள்தான். நல்ல வேளை. அம்மாவிடம் தற்செயலாக வயலட் புடைவை ஏதுமில்லை. வீட்டில் அவளும் வயலட் புடைவை அணிந்து நடமாடினால், தன்னால் சுமுகமாகப் பேசக்கூட முடியுமா என்று அவனுக்குச் சந்தேகமாக இருந்தது.

"ஜகன், நீ ஒரு பாட்டுப் பாடறியா?'' சந்திரா டீச்சர் அவனைப் பார்த்துக் கேட்டாள்.

ஜக்கு பாடுவான். மிக மெல்லிய குரலில் அழகாகவும் ரசிக்கும் விதத்திலும், சில பக்திப்பாடல்களை அவனால் பாட முடியும் என்பது டீச்சருக்குத் தெரியும். அதனால்தான் பயணத்தின் குதூகலத்தை அதிகரிக்க அவனைப் பாடச் சொன்னாள்.

ஆனால் இந்தப் பயணத்தில் யாருடனும் பேசாமல், முற்றிலும் தனித்தே இருந்து நிறைய யோசித்துத் தீர்க்க வேண்டும் என்று அவன் முடிவு செய்திருந்தபடியால், டீச்சரின் கோரிக்கை அவனுக்கு தர்மசங்கடமாக இருந்தது. பாட்டு என்று ஆரம்பித்தால் ஒருபோதும் ஒன்றுடன் நின்றுவிடுவதில்லை.

''அப்புறம் பாடறேனே டீச்சர்?'' என்றான் ஜக்கு.

''ஏன்?''

''தூக்கமா வருது டீச்சர்'' என்று தைரியமாக ஒரு பொய்யைச் சொன்னான்.

"காலங்கார்த்தால ஃப்ரெஷ்ஷா இருக்க வேண்டாமா?'' என்றார் டேவிட் மாஸ்டர். கழுத்தில் சுற்றிய மஃப்ளருக்குள் வாக்மன் ஒயர்கள் தெரிய, மாஸ்டர் முற்றிலும் மாறுபட்ட ஜாலி மூடில் இருப்பதாகப் பையன்களுக்குத் தோன்றியது. சற்று வளர்ந்த, பெரிய கிளாஸ் பையன்கள் அவரிடம் மிமிக்ரி செய்யும்படி வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள். வேதியல் வகுப்பில் எத்தனை காலமாக அவர் மிமிக்ரி செய்து காட்டிக் கொண்டிருக்கிறாரோ? பெரிய வகுப்புப் பையன்களெல்லாம் அதிர்ஷ்டசாலிகள்.

"செஞ்சுடுவோமா? முதல்ல யார் குரல் வேணும்?'' கண்ணடித்துக் கேட்டார் டேவிட் மாஸ்டர்.

"ஹெட்மாஸ்டர் சார்...''

சடாரென்று சிறி வந்த வெடிச் சிரிப்புக் குரலுக்கு உடனே எதிர்வினையாக, '''உதைபடுவே படவா? உங்கப்பாவை வந்து என்னைப் பாக்கச் சொல்லு'' என்று ஹெட்மாஸ்டர் குரலிலேயே பதில் சொன்ன டேவிட் மாஸ்டரின் சாமர்த்தியத்துக்கு, டீச்சர்கள் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

''கொஞ்சம் மெதுவா சார். ஹெட்மாஸ்டர் பக்கத்து பஸ்லேதான் வரார்'' என்றார் சந்திரா டீச்சர்.

"வரட்டு... வரட்டு...ம். எல்லாம் அப்பன் முருகப் பெருமான் சித்தம்...'' பேருந்தில் சட்டென்று வாரியார் ஏறிக் கொண்டார்.

'ஹோஹோ'வென்று பையன்கள் ஆரவாரம் செய்தார்கள். உற்சாகமாகப் பழகக்கூடிய ஆசிரியர்கள் கிடைப்பது ஒரு வரம். ஜக்குவுக்கு சந்திரா டீச்சரை எப்போதும் ரொம்பப் பிடிக்கும். ஆனால் அன்று அவன் வீட்டுக்கு வந்து புகார் செய்ததிலிருந்து, மனத்துக்குள் அவள் பேச்சு காய் விட்டிருந்தான். 'படிக்கிற பையன் உம்மென்று இருப்பது தவறு.

---

''டேய் அம்பி! ஒண்ணு முதல் நூறு வரை எண்ணத் தெரியுமா உனக்கு?''

''ஓ! ஆயிரம் வரை கூட எண்ணிக் காட்டுவேன்! ஆனா அதுக்குள்ள நீங்க இன்னும் இரண்டு கப் காபி கேட்டு வாங்கிக் குடிச்சுடுவீங்களே. அதான் யோசனையா இருக்கு!''

- ஓப. கலாசாமி

---

என்ன பிரச்னை என்று கவனியுங்கள்.'

அன்று தொடங்கி வீட்டில் அப்பாவும், தாத்தாவும், அம்மாவும் மாற்றி மாற்றி அவனைக் குடைந்துகொண்டேதான் இருந்தார்கள். மிரட்டல் இல்லை. அன்பாக, அரவணைப்பாக, தலையைக் கோதி விட்டபடிக்கு நடக்கிற மாறுபட்ட விசாரணை. "என்னடா செல்லம்? ஏன் என்னவோ மாதிரி இருக்கே? உடம்புக்கு என்னமாச்சும் பண்றதா? டீச்சர் திட்டினாளா?" பதிவு செய்யப்பட்ட கேள்விகள். "ஒண்ணுமில்லேப்பா. ஒண்ணுமில்லேப்பா." ஒரே ஒரு பதில்.

அவன் தனக்குள் மிகவும் களைப்படைந்து விட்டது போல உணர்ந்தான். வேண்டாத ஒரு பிரச்னையை மனத்துக்குள் ஏற்றிக் கொண்டு தன்னைத்தானே துளித்துளியாகத் தின்று கொண்டிருப்பது மாதிரி, சொற்களற்று உணர்ந்தான். இந்த விஷயத்தை எப்படி மறப்பது அல்லது தீர்ப்பது? இரண்டில் ஏதாவது ஒன்று நடக்காவிட்டால், அடுத்து வரும் தேர்வுகளில் தன் மதிப்பெண்கள் அவசியம் குறைந்தே போகும் என்று அவனுக்குத் தோன்றியது.



கொஞ்ச நாளாகப் படிப்பு கொஞ்சம் கசக்கத் தொடங்கியிருந்தது. இயல்பான புத்திசாலித்தனத்தால் வகுப்பறையில் ஆசிரியர்களின் கேள்விகளைச் சமாளித்து விட முடிகிறதே தவிர, முன்னளவு ஆர்வம் செலுத்த முடியவில்லை என்பது அவனுக்கே தெரிந்திருந்தது. அடிக்கடி படுத்துத் தூங்கலாம் போல் இருக்கிறது. தோட்ட வேலைகளில் முற்றிலும் ஆர்வம் இல்லாமல் போய்விட்டது. வெங்கடாஜல பதியிடம் நெருங்க முடிவதில்லை. தாத்தாவின் அற்புதக் கதைகள் இப்போதெல்லாம் ரசிப்பதில்லை. டீவி பார்க்கப் பிடிக்கவில்லை. விளையாட்டு சுத்தமாக நின்றுவிட்டது. குட்டிகூட போரடிக்கிறாள். எப்போதும் ஒரே ஞாபகம்தான். அப்பா. அப்பா என்றால் டைரி. டைரி என்றால் வயலட் புடைவை. வயலட் புடைவை என்றால் நிர்மலா.

அதைப் படித்திருக்க வேண்டாம். அடுத்தவர் டைரியைப் படிப்பது தவறு என்று இதனால்தான் எல்லாருமே சொல்கிறார்களோ என்னவோ. அது நல்ல கதை. ஒருத்தர் தப்பு செய்துவிட்டு டைரியில் எழுதி வைப்பாராம். அது தவறில்லையாம். ஆனால் எடுத்துப் படித்தால் அது தவறு! என்ன நியாயம் இது?

இரண்டு மணி நேரம் பாட்டும் கூத்துமாக பஸ் நிற்காமல் ஓடி, விழுப்புரம் தாண்டியதும் ஓரிடத்தில் காலைச் சிற்றுண்டிக்காக நின்றது.

"பேகெல்லாம் பஸ்லேயே இருக்கட்டும். எல்லாரும் வரிசைல இறங்குங்க..." சந்திரா டீச்சர் பேருந்தின் கதவருகே நின்றுகொண்டு, பையன்களை வரிசைப் படுத்த ஆரம்பித்தாள்.

ஓட்டல் தமிழ்நாடு, உயர்தர சைவ உணவகம் உங்களை வரவேற்கிறது. பொங்கலும் வடையும், இட்லியும் சட்னியும். முன்னதாகச் செய்து வைத்திருந்த ஏற்பாட்டில், உணவு மேசைகள் களைகட்டின.

ஜக்குவுக்கு மிகவும் பசித்தது. ஆனால் அந்தப் பொங்கலும் இட்லியும் அவன் அம்மா செய்வது போலில்லை. வேறு ருசி. வேறு மணம். பேருக்குச் சாப்பிட்டுவிட்டு, காப்பியை வாங்கிக் குடித்துவிட்டு, வாயைத் துடைத்துக் கொண்டான். எல்லாரும் வந்து சேருவதற்கு முன்னதாக பஸ்ஸில் ஏறி, தன்னிடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

வண்டி புறப்படும்போது சந்திரா டீச்சர் முன்னேறி வந்து, அவனுக்கு அருகே இருந்த இருக்கையில் அமர்ந்து கொண்டாள். அங்கே உட்கார வந்த ஜக்குவின் நண்பனைத் தன் இடத்துக்குப் போகச் சொல்லிவிட்டு, "உன்கிட்டே பேசணும்னுதான் இங்கே வந்து உட்கார்ந்தேன்." என்று சொன்னாள்.

அவனுக்குக் கொஞ்சம் பயமாக இருந்தது. குனிந்து சீட்டுக்குக் கீழே பார்த்தான். விக்கி மிகவும் ஜாக்கிரதையாகப் பதுங்கி ஒதுங்கி அமர்ந்து கொண்டிருந்தது. அது தூங்கிக் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

(தொடரும்)







# வாய்க்குள் மகிழ்ச்சி!

**'ஏற்றுமதி செய்' என்பது இன்று தொழில் துறைக்கு தாரக மந்திரமாயிருக்கிறது. அப்படிச் செய்யும்போது சில சமயம் எதிர்பாராத வேடிக்கைகள் நடப்பதுண்டு.**

க்ளேரால் (clairol) என்ற அலங்காரச் சாதனங்கள் தயாரிக்கும் நிறுவனம், தலைமுடியை சுருட்டையாக்கும் கருவியை ஜெர்மனிக்கு அறிமுகம் செய்தது. அதற்கு கொடுக்கப்பட்டிருந்த பெயர், 'மிஸ்ட் ஸ்டிக்'. அந்தப் பெயரைக் கேட்ட உடனே ஜெர்மானியர் மூக்கைப் பொத்திக் கொண்டு ஓடி விட்டனர். ஏனெனில், அவர்கள் ஊர் சொல் வழக்கில் மிஸ்ட் என்றால் எரு!

'கெர்பெர்ட்' என்ற குழந்தை உணவு தயாரிக்கும் நிறுவனம், ஆப்பிரிக்க நாடுகளுக்கு குழந்தை உணவை டப்பாக்களில் அடைத்து விற்பனைக்கு அனுப்பியது. டப்பாவின் மேல் கொழு கொழு குழந்தையின் படம் ஒன்று அச்சிடப்பட்டிருந்தது. அனுப்பிய பிறகுதான் ஞானோதயம் ஏற்பட்டது. பெரும்பாலான ஆப்பிரிக்க நாடுகளில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் குறைவு. அதனால் பொருள்களை டப்பாவில் அடைத்து அனுப்பும்போது, உள்ளே இருக்கும் பொருளின் படத்தை டப்பாவின் வெளியில் போடுவது வழக்கம்!

கோல்கேட் பற்பசை கம்பெனி, பிரான்சுக்கு ஒரு பற்பசையை விற்பனைக்கு அனுப்பியது. இதன் பெயர் க்யூ (Cue) இந்தப் பெயரைக் கேட்ட மக்கள் ஆச்சரியத்துடன் புருவத்தை உயர்த்தினர். ஏனெனில் அந்தப் பெயரில் ஓர் ஆபாசப் பத்திரிகை அந் நாட்டில் உண்டு!

'பெப்சி' குளிர்பான விளம்பரங்களில் 'பெப்சி தலைமுறையுடன் உயிர்த்தெழுங்கள்' (come alive with Pepsi generation) என்ற கருத்தை அப்படியே சீன மொழியில் மொழி பெயர்த்தார்கள். விளைவு: 'பெப்சி உங்கள் முன்னோர்களை அவர்கள் கல்லறையிலிருந்து கொண்டு வரும்' என்று சீனர்கள் படித்துத் தெரிந்து கொண்டார்கள்!

'கோகோ கோலா' தனது சீன விளம்பரங்களில் பெயரை மொழி மாற்றம் செய்ய மிகவும் சிரமப்பட்டது. கி-கொவ்-கி-லா என்று முதலில் மொழி பெயர்த்துப் பார்த்தார்கள். ஆனால் அதற்குப் பொருள் 'மெழுகினால் நிரப்பப்பட்ட பெண் குதிரை' என்று தெரிய வந்தது. 40000 வார்த்தைகளை ஆராய்ந்து கடைசியில் கொ-கொல்-கோலே என்று பெயரிட்டனர். இதன் பொருள் 'வாய்க்குள் மகிழ்ச்சி!'

இன்டர்நெட்டிலிருந்து தகவல்:
**கிருஷ்ணவேணி ரங்கநாதன்**

## ரிமோட்







# ஜாங்கிரியில் இனிஷியல்!

தீபாவளி அன்று ஒளிபரப்பான சிறப்புப் பட்டிமன்றங்களில் களை கட்டிய நிகழ்ச்சியைத் தந்தது 'விஜய்'யா, 'சன்'னா, 'ஜெயா'வா என்று இன்னொரு பட்டிமன்றம் வைக்கலாம்.

'திரைப்படங்களில் மக்களை அதிகம் கவர்வது - கதாநாயகனா, கதாநாயகியா?' என்ற தலைப்பில் ஐ.லியோனி நடத்திய பட்டிமன்றம் (விஜய்) படு சவசவ...! அங்கசேஷ்டைகளும், பழைய ஜோக்குகளுமாக அதே லியோனி பிராண்ட்!

'பண்டிகையின் மகிழ்ச்சியைப் பெரிதும் அனுபவிப்பது - பிள்ளைகளே! பெற்றோர்களே!' என்ற தலைப்பில் சாலமன் பாப்பையா நடத்திய பட்டிமன்றம் (சன்) சிரிப்பும் சென்டிமெண்ட்டுமாகக் கலக்கியது.

'இளமையும் புதுமையும் சாதிக்கிறதா? சோதிக்கிறதா?' என்ற தலைப்பில் கு. ஞான சம்பந்தம் நடத்திய பட்டிமன்றம் லேட்டாக வந்தாலும், லேட்டஸ்டாக இருந்தது.

"தீபாவளி அன்னிக்கு அக்கம்பக்கத்து வீட்டுக்காரங்க எல்லாம் இனிப்பு, பல காரம்னு கொடுத்தனுப்புவாங்க! தெரு முழுக்க ஒரு ரவுண்டு போயிட்டு, கடைசியிலே நம்ப வீட்டுப் பலகாரம் நமக்கே திரும்பி வந்துடும். அதனாலே எங்க வீட்டு ஜாங்கிரியிலே இனிஷியல் எல்லாம் போடறதுண்டு!" என்று கலகலப்பாக ஆரம்பித்தார் குஞா! ஆனால் என்ன தீர்ப்பு சொன்னார் என்று தெரியவில்லை. அதற்குள் 'சிநேகா' பேட்டிக்குத் தாவியாயிற்று.

நீல நிற சுரிதாரில், நீலப் பொட்டு, நீல வளையல், நீலக் கம்மல், என்று நீல மோகினியாகச் சிரித்துச் சிரித்துப் பேசினார் சிநேகா. (அவரது இயற்பெயர் சுஹாசினியாம். பெயர் வைத்தவரின் ஞான திருஷ்டிக்கு திருஷ்டி கழிக்கலாம்!)

"Look, Observe, Verify and Enjoy. இதுதாங்க லவ்!" என்று காதலுக்கு விளக்கமளித்தார்.

பேட்டி எடுத்த விடாக் கொண்டி, "நீங்க லவ் பண்றீங்களா? செலக்ட் பண்ணியாச்சா?" என்றெல்லாம் துருவித்துருவிக் கேட்க... "இன்னும் இல்லை. செலக்ட் பண்ணினா உங்களுக்கு எல்லாம் சொல்லாம இருப்பேனா?" என்று கொடாக் கண்டி நழுவ...

உடனே 'கட்' பண்ணி போடப்பட்ட கிளிப்பிங்கில்...

"என் இதயக் கோயிலின்" என்று வசனம் பேசியபடி ஸ்ரீகாந்துடன் சிநேகா தோன்றும் லவ்ஸ் காட்சி!

சிநேகா நிச்சயம் ரசித்திருப்பார்!

• ஆதர்ஷ்



''என் கணவர் 'சம்பளம் வந்ததும் தரேன்'னு சொல்லி எல்லாரிடமும் கடன் வாங்கி என் மானத்தை வாங்கிட்டாருடி...''

''இதுல உன்னோட மானத்துக்கு என்ன பாதிப்பு?''

''அவர் கடன் வாங்குறது என் சம்பளத்தைச் சொல்லித்தானே!''

- எம். அசோக்ராஜா

---

''ஆபீஸ்ல உனக்கு சிக் லீவு தரமாட்டேன் னுட்டாங்களாமே, ஏன்?''

'''ஹோம் சிக்'குக்கெல்லாம் லீவு கிடையாதாம்!''

- மேலமங்கலம் பத்ரா



---

''கோகுலத்தில் கண்ணன் வெண்ணெயைத் திருடித் திங்கறச்சே மாட்டிண்டு முழிச்சப்போ கோபியர் எல்லாம் சுத்தி நின்னுண்டு என்ன சொன்னா?''

'''பட்டர் லக் நெக்ஸ்ட் டைம்'னு சொன்னா!''

- பகா. மணிமொழியன்





தீபாவளி மாலை முழுவதும் 'ஸன்' டீ.வி. 'குஷி' படத்தில் மூழ்கிப்போக, ஜெயா டீ.வி.யில் மலேசிய கலை நிகழ்ச்சியின் கும்மாளமான குத்தகை. ஷெரீன் ஆட்டத் துக்கு விசில் பறந்தது!

"ஒரே ஒரு பொய் சொன்னாலும், குள்ள மாயிடுவீங்க" (இன்னுமா?) என்ற மிரட்ட லுடன் குஷ்பூ, பேட்டி எடுத்தது பாண்டிய ராஜனை!

ஏடாகூடமான கேள்விகளுக்கு, பச்சைப் பொய்களைப் பயப்படாமல் வாரி இறைத் தார்! கடைசியாக...

"சரி... உங்க வயசு என்ன?"

"இருபத்தொன்பது!"

"ஹாங்! இருபத்தொன்பதா? சார்... நல்லா யோசிச்சு சொல்லுங்க... உங்களுக்கு இருபத் தொன்பது வயசுதானா?"

"கண்டிப்பா..."

"பத்து வருஷத்துக்கு முன்னாலே, இதே மலேஷியாவுலே, இதே மேடையிலே, இதே கேள்வியைக் கேள்வியைக் கேட்ட போதும், இருபத்தொன்பதுன்னு சொன்னீங்க. ஞாபக மிருக்கா?" என்று குஷ்பூ அதட்டவும்,

''ஆமாங்க. நல்லா ஞாபகமிருக்கு. பாண்டியராஜன் கிட்டே இன்னிக்கு ஒரு பேச்சு, நாளைக்கு ஒரு பேச்சு கிடையாது." என்று சொன்னாரே பார்க்கலாம்.

எப்போதும் கிளாஸ் ஆடியன்ஸுக் காகப் படம் எடுக்க முனைப்பு காட்டும் கவிதாலயா, எப்போது மாஸ் ஆடியன்ஸுக் காகப் படம் எடுக்க ஆரம்பித்ததோ, அப் போதே 'திருமலை' மாதிரி யான படத்தை எதிர்பார்த் ததுதான்.



• அர்ஜுன்

கல்லூரியில் நண்பர் களின் முன்னிலையில், மெக்கானிக் விஜய், தப்பும் தவறுமாக எழு திய காதல் கடிதத்தை, ஜோதிகா படித்துக் காட்டும் காட்சி. உதாரணத்துக்கு, 'என் காதலை ஒத் துக் கொள்' என்பதை விஜய் எப்படித்தப்பாக எழுதியிருப்பார் என்று அந்தக் கல்லூரியில் படிக்கும் டீஸன்ட் பெண்களே ஊகித்து மகிழ்கிறார் கள். கலி காலம்!

கே. டீவியில் ரமேஷ் கண்ணாவின் பேட்டி. "ஒரு பாட்டு பிரபலமாகிறது என்றால், அதை மிகவும் யோசித்து மெருகேற்றியிருக்கிறார்கள் என்று அர்த்தம். இதைக் காப்பியடித்துக் கிண்டல் செய்வது மிகக் கேவலம். கண்டிக்கத்தக்கது" என்றார். விவேக், யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ். (இதை ஒளிபரப்பிய கே. டீவியின் தாய் சானலான 'சன்'னிலேயே பிரபல சினிமாக்களை மலின மாக்கி காமெடி பண்ணும் நிகழ்ச்சி ஒன்று வாராவாரம் ஒளிபரப்பாவது வேறு விஷயம்).

"'சேது'வுக்குப் பிறகு தான் பிற நடிகர்கள் வித விதமான கெட்டப்புகளில் நடிக்கத் தொடங்கினார்கள்" என்றார் 'சன்'னில் விக்ரம். தீபாவளிப் பேட்டி என்பதால் 'நவராத்திரி'யை மறந்து விட்டாரோ?

நேரடிப் பேட்டிக்கு



• விக்ரம்

பதிலாக கேள்விகள் திரையில் மின்னுவதுண்டு. அல்லது கேள்விகளைத் தனியாக ஒருவர் கேட்க, வேறொரு இடத்தில் நட்சத்திரங்கள் பதிலளிக்க, இரண்டையும் ஒட்டுப் போட்டு ளிப்பதும் உண்டு. ஆனால் 'விஜய்'யில் கேள்வி என்ற எதுவும் இல்லாமலேயே, த்ரிஷா பலவித பதில்களை அளித்தார். கேள்விகளை நம்மால் புரிந்து கொள்ள முடிந்தது. நன்று. இதேபோல் பல்வேறு வழக்கமான நிகழ்ச்சிகளுக்குக் கூட தொகுப்பாளினிகளின் அபத்தமான தொகுப்பு இல்லாமலேயே நேரடியாகக் காட்சிகளையோ, பாட்டுக்களையோ ஒளிபரப்பலாமே.

"'சாமி' படத்தில் நடித்தபோது அது ரொம்ப நல்லா ஓடும்னு என் சிக்ஸ்த் சென்ஸ் சொல்லிச்சு" என்றார். 'அலை' ரிலீஸாவதற்கு முன் அது பற்றிக் கேட்டிருந்தால் வேறு மாதிரிச் சொல்லியிருப்பாரோ?

ஜெயாவில் அர்ஜுன் அந்த வழக்க



• ஷெரீன்

மான கேள்விக்குக் கொதித்தெழுந்தார்.

"என் படங்களில் தேசபக்தியை முக்கியமாக வைப்பதில் என்ன தப்பு? பார்ப்பவர்களில் ஒரு சிலருக்காவது இதனால் நாட்டுப் பற்று வளர்ந்தால் நல்லதுதானே? பாசிடிவ் வைப்பரேஷன்ஸை உருவாக்க நினைக்கிறேன் நான். இதில் கிண்டல் பேச எதுவுமில்லை" என்றார். 'சன்'னில் கட்டடத் தொழிலாளர்களுடன் ஒரு சந்திப்பில் இவரைப் பற்றி பத்திரிகைகளில் மிக மோசமாக வரும் செய்திகளைப் பற்றிக் கேட்டபோது "பத்தொன்பது வருஷமா இந்தத் துறையிலே இருக்கேன். இவர்கள் சொல்வது போல் நானிருந்தால், எப்பவோ இந்த மாதிரி எழுதியிருக்கணும். இப்போ வெளியிடுவதில் யாருக்கோ உள்நோக்கம் இருக்கு" என்றார்.

வில்வித்தை அர்ஜுனுக்கு சொல்வித்தையும் சரளமாக இருந்தது.

**வை**த்தியர், மருந்து இரண்டிலும் மானிடராகப் பிறந்தவர்களுக்கு மாளாத காதல்.

**"வாளால் அறுத்துச் சுடினும்**
**வைத்தியன்பால்**
**மாளாத காதல் போல்"**

என்றல்லவா பாடிவிட்டார் ஆழ்வார்.

நோய்களைத் தீர்க்கும் வைத்தியராக வைத்தீச்வரன் கோவிலில் விளங்குகிறார் என்றால் மருந்துகளுக்குள்ளேயே இருந்து கொண்டு குணப்படுத்தும் சாரமாகவே இருக்கிறார் ஓஷதீச்வரர் என்ற வடமொழிப் பெயருடைய மருந்தீச்வரர். அப்பர் பெருமானும், சம்பந்தர் பெருமானும் பாடிய மருந்தீசர்.

**"திருவான்மியூர் மருந்தைச் சேர்ந்து**
**பணிந் தன்பினொடும்**
**பெருவாய்மைத் தமிழ் பாடிய"**

அப்பர் பெருமான் பாடிய பதிகத்தைப் பாடினால் மெய்யாகவே மெய்யில் தோன் வரம் கொடுத்து விட்டார்.

இராவணேசுவரனின் அகம்பாவம் நம் கற்பனைக் கெட்டாதது. அதையே கொடிய நோய் களைவது போல் களைந்தான் ஈசன். நமது பிழைகளைப் பொறுத்து நம் 'நோய்'களையும் களைவான்.

கோவில்களைப் பராமரிக்காமலிருக்கும் பிழை, குளங்களைப் பராமரிக்காமலிருக்கும் பிழை, சூழ்நிலையைப் பாதுகாக்காத பிழை, நாம் சுவாசிக்கும் வாயு மண்டலத்தை நச்சு மயமாக்கும் பிழை, நம்மைப் பாதுகாக்கும் மரங்களையும், கருதாப் பிழை எல்லாப் பிழைகளையும் பொறுத்து அமுதமயமான மருந்தாக இருக்கிறார் மருந்தீசர்.

**"திரு மருந்துடன் பாக மருந்து**
**தேவாதி மூவர்கள் காணா மருந்து**
**இரு வினைகள் அறுக்கு மருந்து**
**ஏழையடியார்க்கிரங்கு மருந்து"**

என்று முத்துத்தாண்டவர் பாடிய சிற்றம்பல ரசனின், மற்றொரு வடிவம்தானே இந்த

# மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி...

# 2

ற்றிய பிணிகள் தீரும்.

**"வாதை தீர்த்திடும் வான்மியூர் ஈசனே"** என்றும்

**"வாட்டம் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே** என்றும்

**"மருளறுத்திடும் வான்மியூர் ஈசனே!"**

என்றும் பாடியவர், பத்தாவது பாடலில்,

**பாரமாக மலையெடுத்தான் தனை**
**சிரமாகத் திருவிரலூன்றினான்**
**ஆர்வமாக அழைத்தவன் ஏத்தலும்**
**வார மாயினன் வான்மியூரீசனே"**

என்று முடிக்கிறார்.

இலங்காதிபதியான ராவணேசுவரன் அகங்காரத்துடன் திருக்கயிலாய மலையைத் தூக்கியபோது, அவனுடைய அகம்பாவம் சிதைய கட்டை விரலால் அழுத்தி விட்டார் சிவபெருமான். அவன் கர்வம் ஒடுங்கி ஆர்வத்தோடு ஈசனைத் துதித்ததும் இரங்கி மருந்தீசர்!

திருவான்மியூரில், தானே முளைத்துத் தழைத்த மருந்தாகிய சிவபெருமானை வால்மீகி முனிவர் பூஜித்ததாக வரலாறு. ராமாயணத்தைப் பாடி முடித்த பிறகு ஒருநாள் மகரிஷியும் சிரஞ்சிவியுமான மார்க்கண்டேயரைக் கண்டார் வால்மீகி முனிவர். தாம் ராமாயண காவியம் படைத்திருப்பதைச் சொன்னார். மார்க்கண்டேயரும் மனம் மகிழ்ந்து, வால்மீகி முனிவருக்கு சிவபூஜையின் சிறப்பையும், தாம் சிவபூஜை செய்து அடைந்த பேற்றையும் எடுத்துச் சொன்னார். வால்மீகி முனிவருக்கு சிவபெருமானைத் தரிசிக்க வேண்டும் என்று ஆர்வம் உண்டாயிற்று. "நான் இங்கே இருக்கிறேன்" என்ற அசரீரி கேட்கும் இடத்தில் சிவபெருமானை வழிபட்டு நல்ல கதி அடைவீர்" என்று சொன்னார் மார்க்

தெய்வத் தமிழ் நாட்டினிலே...

கண்டேயர்.

**வா**ல்மீகி முனிவரும் பரத கண்டம் முழுவதும் தீர்த்தயாத்திரை செய்து கொண்டு தெற்கே வந்தார். பாலாற்றிலிருந்து சில காத தூரத்தில் உள்ள அமுதபுரி என்ற இடத்திற்கு வந்தபோது, அசரீரி வாக்குக் கேட்டது. வால்மீகி முனிவர் அங்கே தோன்றிய சுயம்புலிங்கத்தை வழிபட்டுப் பலகாலம் பூஜைகள் செய்து வந்தார். மாமுனிவரின் பூஜையை ஏற்றுக் கொண்ட ஈசன் தரிசனம் தந்தார்.





முனிவர் வழிபட்டதால் அமுதபுரி வான்மீகியூர் என்று பெயர் பெறும் என்றும், பங்குனி உத்திரத்தில் பௌர்ணமியில் தம்மை வழி படுபவர்கள், உயர்ந்த கதியடைவார்கள் என்றும் வரம் தந்து மறைவதற்கு முன்னால் பதினெட்டு விதமான நடனங்களை ஆடி முனிவருக்குக் கண் குளிரக் காட்சி தந்தார் ஈசன்.

பங்குனி உத்திரப் பெருவிழா இன்னும் திருவான்மியூரில் விமரிசையாக நடந்து வருகிறது. மருந்தீசர் கோயில் அருகேயே வால்மீகி முனிவர் கோயில் இப்போது கிழக்குக் கடற்கரைச் சாலைக்குத் திரும்பும் இடத்தில் இருக்கிறது.

காமதேனு பால் சுரந்து அபிஷேகம் செய்ததால், வெண்மையாகக் காட்சி தந்த ஈசனுக்கு பால் வண்ணநாதர் என்ற பெயரும், கல்வெட்டுகளில் உலகாளுடைய நாயனார் என்ற பெயரும் உண்டு.

**தி**ருவான்மியூரின் இன்னொரு சிறப்பு தியாகேசர் நடனக் காட்சி. தல புராணத்தின்படி முசுகுந்த சக்கரவர்த்தி பத்து தியாகேச மூர்த்தங்களைக் கொண்டு வந்ததாக ஐதிகம். ஸப்த விடங்க ஸ்தலங்களிலும் பிரதிஷ்டை செய்த பிறகு திருவான்மியூர், திருவொற்றியூர், திருக்கச்சூர் மூன்று தலங்களிலும் தியாகேசரை வைத்து வழிபட்டாராம்.

பங்குனி மாதத்தில் உற்சவம் நடைபெறும்போது, பவனி மேடையில் தியாகேசரின் திருநடனக் காட்சி வெகு அழகாக இருக்கும். ஆருத்ரா அன்று திரிபுரசுந்தரி அம்மன் எதிரே பதினெட்டு நடனமும் ஆடுவார் தியாகேசர். தியாகேசரை எழுந்தருளச் செய்து தூக்கிக் கொண்டு வந்து

■ ஆனந்தி ■

கடலில் மூழ்கிய 'டைட்டானிக்' கப்பலில் பயணம் செய்வதற்காக 10.04.1912ல் வழங்கப்பட்ட முதல் வகுப்பு டிக்கெட்தான் இது.

- வில்லவன் கோதை

ஆடவைப்போரை ஸ்ரீபாதம் தாங்கிகள் என்று அழைக்கிறார்கள். தாளகதியுடன் காலெடுத்து வைப்பதே அலாதியாக இருக்கும். தியாகேசரைச் சாய்த்துத் தூக்கி அணைத்துக் கொண்டு வருவதற்கு இவர்கள் என்ன தவம் செய்தார்களோ?

மிகவும் சுவையான ஒரு பதிகம். ஞான சம்பந்தப் பெருமான் பாடி மகிழ்ந்த வினாவுரைப் பதிகம். சிவத் தொண்டர்கள்தான் எப்படி எல்லாம் ஈசனுடன் வாதாடுகிறார்கள்! சமநிலையில் நின்று கேள்வி கேட்கிறார்கள்! நிந்தனை செய்து துதிக்கிறார்கள். ஏவல் செய்யச் சொல்கிறார்கள். அன்பு என்பது என்னவிதமாகவெல்லாம் செயல்படுகிறது. என்ன உரிமையோடு பேசுகிறார்கள்! கேள்வி கேட்டுப் 'பதில் சொல்லும்' என்று அதிகாரமாகக் கேட்கிறார்.

*மஞ்சுலாவிய மாடமதிற் பொலி*
*மாளிகைச்*
*செஞ்சொலாளர்கள் தாம் பயிலுந்திரு*
*வான்மியூர்த்*
*துஞ்சு வஞ் சிருள் ஆடல்உகக்க வலீர்*
*சொலீர்*
*வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள்*
*வைத்ததே.*

"மேகங்கள் எப்போதும் உலவுகின்ற, மாளிகைகள் பொலிகின்ற, சிறந்த மொழிகளை அழகாகப் பேசுகின்ற, பெரியோர்கள் வாழ்கின்ற திருவான்மியூரில் கோயில் கொண்ட பிரானே!"

என்று அழைத்து,

"தூங்க வேண்டிய நள்ளிருள் வேளையில் காட்டில் நடனமாடுவது எதற்காக? சொலீர்! கொடிய விஷத்தை நீர் விழுங்கி வானவர்களுக்கு அமுதத்தை அளித்தீரே! அது எதற்காக?" என்று கேட்கிறார்.

கேள்வியிலேயே விடையும் இருப்பதைப் பார்க்கிறோம். காட்டில் நடனம் பயில்வது அடியார்களுக்குப் பதவியளித்துக் காப்பதற்காகத்தானே! ஊழி நடனம் என்பது சகல உயிர்களையும் தம்மோடு சேர்த்து அணைத்துக் கொள்வதுதானே! அதேபோல ஆலகாலத்தை உண்டது தேவர்களுக்கு அமுதத்தை அளிப்பதற்காகத்தான். சிவபெருமானின் அளப்பரிய கருணையே உயிர்களை ஓம்புகிறது என்பதை, அந்த ஞானக் குழந்தை எவ்வளவு அழகாகச் சொல்லிவிட்டார். ஒரு சுட்டிகையான குழந்தை "சொல்லு! சொல்லு" என்று பெரியவர்களைக் கேட்பது போலவே இருக்கிறது பதிகம்.

அருள்ஞானச் செல்வனின் இன்னொரு அழகிய பதிகத்துடன் சிவபெருமானின் ஆதரவை நாம் வேண்டுவோம்.

*"பொன்போ லுஞ்சடைமேல் புனல்*
*தாங்கிய புண்ணியனே!*
*மின் போ லும்புரிநூல் விடையேறிய*
*வேதியனே!*
*தென் பால் வையமெலாந் திகழும் திரு*
*வான்மிதன்னில்*
*அன்பா உன்னையல்லா*
*லடையாதென தாதரவே!"*

உம்மைத் தவிர எமக்கு கதி யார் இருக்கிறார்கள்! அன்பரே! உம்முடைய ஆதரவை வேண்டுகிறேன்..." என்று பத்துப்பாடல்களில் ஈசனின் ஆதரவை வேண்டி உருகியிருக்கிறார் ஞானசம்பந்தர். நாடு இருக்கும் நிலையில் ஈசனின் இணையடியில்தானே நாம் ஆதரவைத் தேட முடியும்?

(தொடரும்)

# பதிலடி பக்கம்!

# ஆணவத்தில் பேசுகிறார் ஜெயமோகன்!

• வேலா.ராமமூர்த்தி

'கலைஞர் மேடையில் தரம் தாழ்ந்த பேச்சு' என்னும் தலைப்பில் ஜெயமோகனின் விளாசலை, 19.10.2003 கல்கி இதழில் வெளியிட்டிருந்தீர்கள்.

இளையபாரதி நூல்கள் வெளியீட்டு விழாவில் கலைஞர் புகழப்பட்டதில், ஜெயமோகனுக்கு என்ன வருத்தம், நட்டம் என்று புரிந்து கொள்ள முடியவில்லை. ஏன் இந்த அளவு கொதிக்கிறார்? அவர் ஒருவர் தான் எல்லாம் அறிந்த இலக்கியவாதியா! இவருடைய நூல்கள் வெளியீட்டு விழாவில் ஜெயகாந்தனால் இவர் பாராட்டப்படும்போது, இவருக்குக் கூச்சம் ஏற்படவில்லையா? இன்னொரு நிகழ்வில் மற்றொருவர் பாராட்டப்படும்பொழுது இவருக்கு ஏன் கூச்சம் ஏற்படுகிறது? தாங்கள் குறிப்பிட்டுள்ளபடி, ஒரே மூச்சில் எட்டு நூல்களை வெளியிட்டுள்ளதாலும், ஜெயகாந்தனால் "முன்னோடிகளுக்கும் முன்னோடியாக வருவார்" என்று இவரைப் பாராட்டியுள்ளதாலும் ஏற்பட்ட ஆணவத்தால் உளறுகிறார்.

- எம்.இராமதுரை,
கள்ளக்குறிச்சி

• ஜெயமோகன்

### மோப்பப் புலன் பழுதானதா?

இளையபாரதியின் நூல் வெளியீட்டு விழாவில் பேசிய கவிஞர் பெருமக்களும் நானும், மேற்கோள் காட்டி புகழ்ந்துரைத்தது இளையபாரதியின் மிகச் சிறந்த கவிதைகளையே. அத்தனைப் புகழ்ச்சிக்கும் தகுதியுடையவையே அவரது கவிதைகள். ஜெயமோகனுக்கு வேண்டுமானால் இதில் மாறுபட்ட கருத்து இருக்கலாம். இருந்தால் அது பற்றி அவர் எழுதலாம், பேசலாம். உடம்பு ஏன் கூச வேண்டும்? அவருடைய 'நாய்ச் சாமியார் மட விவகாரம்' போல் அருவெறுப்பாகவோ ஆபாசமாகவோ அன்றைய மேடையில் அது அரங்கேறவில்லையே! அவருடைய மோப்பப்புலன் பழுதுபட்டுப் போனதா?

சுந்தரராமசாமி தொடங்கி, ஒவ்வொரு குரல்வளையாய் நெரித்துவரும் ஜெயமோகனைத் தமது ஆசானாய் அறிவித்ததன் மூலம், தமது கம்பீரம் இழந்து போயிருக்கிறார் ஜெயகாந்தன்.

- வேலா. ராமமூர்த்தி

### எது தரந்தாழ்ந்த செயல்?

கலைஞர் எந்த இடத்திலும் தாம் மட்டுமே சிறந்த எழுத்தாளர் என்று கூறிக் கொண்டதில்லை. அவர் தம் கடமைகளுள் ஒன்றாக எழுத்தைக் கருதி எழுதி வருகிறார், எழுதுவார். கலைஞர் முதலில் நல்ல படிப்பாளர். அதற்காக மற்றவர்கள் நினைப்பது போல, கலைஞர் எழுத வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது.

வகைப்பாடு என்று எடுத்துக் கொண்டால், எதை வகைப்பாடு என்று கூறுகிறார்கள் எனத் தெரியவில்லை. கலைஞர், 'கலை வாழ்க்கைக்காக' என்ற கருத்துடையவர். மக்களுக்காகத் தமது கலையை ஆயுதமாக்கிப் பிரசாரம் செய்யும் பாணி அவருடையது. அந்த வகையில் அவரது எழுத்துகளை ரசிக்கலாம். ஒருவருக்கு உரித்தான இடத்தை மறுப்பதுதான் தரந்தாழ்ந்த செயல். ஒருவரைப் பாராட்டுவது ஒரு போதும் தரந் தாழ்ந்த செயல் அன்று.

- கவிஞர் பொன். செல்வகணபதி,
சென்னை - 90.

# நகரம் மாநகரம்

■ நா.முத்துக்குமார் ■

ஆட்டின் ஆறுக்கும் ஆட்டின் எட்டுக்கும் நடுவில், விசிறி வாழை போல தரையில் கலைந்து பரவியிருந்த சீட்டிலிருந்து எடுத்த ஜோக்கரைச் செருகி 'டிக்' என்று கீழே வைத்தபோது, கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. நான் எழுந்து சென்று கதவைத் திறந்தேன். "என்ன கட்டு போட்டாச்சா? நீங்க எல்லாம் உருப்படவே மாட்டீங்களா?" என்றபடி சண்முகசுந்தரம் உள்ளே நுழைந்தான். நான் அப்போது சென்னை பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ தமிழ் இலக்கியம் முதலாமாண்டு படித்துக் கொண்டிருந்தேன். பாட்டி வீட்டில் தங்கி தினமும் கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்தேன். மதியத்திற்குள்ளாக கல்லூரி முடிந்து விடும். மீதி நேரம் கல்லூரி மாணவர் விடுதியிலே நண்பர்கள் அறையில் அரட்டையடித்துக் கொண்டிருப்போம்.

விடுதிக்குப் பக்கத்திலேயே நுங்கம்பாக்கம் மற்றும் சேத்துப்பட்டு ரயில் நிலையங்கள் இருக்கும். விடுதியின் ஜன்னல் வழியே பார்க்கையில் கட்டம் கட்டமாக ரயில் மனிதர்கள் கம்பியைப் பிடித்தபடி கடந்து போவார்கள். விடுதியை ஒட்டி நூற்றாண்டுகள் கடந்த ஒரு ஆலமரம், கிளிகளுடன் நாங்கள் படிப்பதற்கும் பந்தாடுவதற்கும், நிழல் கொடுத்துக் கொண்டிருக்கும்.

அப்போதைய முன்னணி நடிகைகளின் புகைப்படம் தொடங்கி விவேகானந்தர், அம்பேத்கர், பெரியார் புகைப்படம் வரை, ஒவ்வொரு அறையின் சுவரும் தன் முகத்தை தங்குபவர்களின் முகங்களாக மாற்றிக் கொண்டு, ஸ்பீக்கர்கள் அலற சினிமாப் பாடல்களால் அதிர்ந்து கொண்டிருக்கும். அநேக அறைகளில் ஃபில்டர் கிங்ஸில் ஆரம்பித்து மணியார்டர் வராத வாரங்களில் துண்டுபீடி வரை புகைந்து, ஆஷ்ட்ரேயின் வயிறு எப்போதும் கர்ப்பிணியாகவே இருக்கும். அப்படியான ஒரு புகை மதியப் பொழுதில்தான் ஆட்டின் ஆறுக்கும் ஆட்டின் எட்டுக்கும் நடுவே ஜோக்கரைச் செருகி 'டிக்' என்று கீழே வைத்தபோது சண்முக சுந்தரம் கதவைத் தட்டினான். சண்முகசுந்தரம் பி.ஏ வரலாறு மூன்றாமாண்டு படிப்பவன். கறுப்பிற்கும் சிவப்பிற்கும் இடைப்பட்ட நிறம். விடுதியிலேயே விதவிதமாக உடை உடுத்துபவன் அவன் மட்டுமே. வருடங்கள் முன் நகர்ந்து வந்து விட்ட பிறகும், வலுக்கட்டாயமாக அவன் பால்யத்தில் அறிமுகமாயிருந்த ஸ்டெப் கட்டிங் சிகை அலங்காரத்தை விடாமல், தேயிலைச் சரிவுத் தலையுடன் இன்னமும் அதே பாணியில் வலம் வந்து கொண்டிருப்பான். அறிமுகமான அடுத்த நிமிடமே உங்களிடம் அன்றைய அவனது நிலவரப்படி கடன் கேட்டு விடுவான், அல்லது உங்களுக்காக ஆயிரக்கணக்கில் செலவு செய்வான். அவனுக்காக உங்களுடைய இராஜ்யத்தில் பாதியை எழுதிக் கொடுக்குமளவிற்கு நீங்கள் அவனது பேச்சிலும், தொற்றிக் கொள்ளும் உற்சாகத்திலும் மாறி விடுவீர்கள். சண்முகசுந்தரம் என்பதைவிட, காதல் சுந்தரம் என்றால்தான் விடுதியில் அனைவருக்கும் தெரியும். இருபத்து நான்கு மணி நேரமும் காதல் அலைவரிசையில் நீந்திக் கொண்டிருப்பான். ஒரு நடமாடும் பெண்கள் மனவியலாளனாக அவனை நாங்கள் அங்கீகரித்திருந்தோம்.

அவனது அறையின் மேல் தாஜ்மஹால் என்று யாரோ பெயிண்ட்டில் எழுதி விட்டுச் செல்ல, அவனுக்கும் பிடித்திருந்ததால் அப்படியே விட்டு விட்டான். சண்முக சுந்தரத்தின் சொந்த ஊர் தர்மபுரிக்குப் பக்கத்தில் ஒரு கிராமம். அப்பா விவசாயி.

மாதம் தவறாமல் மணியார்டர் வந்துவிடும். மணியார்டர் வராத மாதங்களில் மஞ்சள் பை நிறைய பச்சை வேர்க்கடலையுடனும், வேட்டிக்குத் தம்பி மாதிரி இருக்கும் அழுக்கு வேட்டியுடனும் அவனது அப்பா விடுதிக்கு வந்துப் பணம் கொடுத்து விட்டுப் போவார். அவர் வரும் சமயங்களில் சண்முக சுந்தரம் உற்சாகம் குன்றி யாரோ போல நடந்து கொள்வான். விடுதியில் தங்கி படிக்கும் எல்லோருடைய தந்தைகளும் அவர்களுடைய பொருளாதார நிலையும் அவனுடையதைப் போலத்தான் இருந்தது, என்பதை அவன் மனம் உணர மறுத்தது. ஓரிரு நாட்களில் மீண்டும் சகஜமாகி விடுவான்.

சண்முகசுந்தரத்தைக் கண்டால் நான் மட்டும் உள்ளூர நடுங்குவேன். அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று சண்முகசுந்தரம் பார்க்கிற பெண்களையெல்லாம் காதலித்துக் கொண்டிருந்தான். காதல் என்றால் அப்படி ஒரு காதல். ஏதாவது ஒரு பெண்ணைப் பார்த்துவிட்டால், அவள் வீட்டைக் கண்டுபிடித்து அவள் தெருவிலேயே பழியாய்க் கிடந்து, பின்னால் அலைந்து அவளை வழியனுப்பி வைத்து, இரவெல்லாம் விடுதி நண்பர்களிடம் அவளைப் பற்றிப் புலம்பிக் கொண்டிருப்பான். அடுத்த வாரம் வேறு பெண்ணின் வரலாறு சொல்லத் தொடங்குவான். விடுதிக்குச் செல்லும் வழி முழுக்க அவனது



ஒருதலைக் காதல்களின் சுவடுகள், கணக்கற்றுப் பதிந்து இறைந்து கிடந்தன. நாங்கள் கூட்டமாக வெளியே செல்லும்போது ஏதாவது அழகான பெண் எதிரே வந்து விட்டால், எங்களுக்கு முன்பாகவே "அது என் ஆள்டா... விட்டுடு" என்பான்.

14

இரண்டாவது காரணம், சண்முக சுந்தரம் கவிதைகள் எழுதுவான். அவனது தமிழ்க் கொலைக்கு என்னை வேறு சாட்சி வைத்துக் கொள்வான். ஒருமுறை அவன் "நீ ஹமாம் சோப்பில் குளிக்கிறாயா? ஆசைக் கடலில் குளிக்கிறாயா?" என்று கவிதை





எழுதி ஒரு பெண்ணிடம் கொடுக்க, அவள் "ஆறு மாசமா முழுகாம இருக்கேன்" என்று பதில் சொன்னதாக விடுதியில் ஒரு வதந்தி உண்டு.

கொஞ்ச காலமாக சண்முகசுந்தரத்திற்கு காதல் முற்றி ஒரே நேரத்தில் நான்கு பெண்களைக் காதலித்துக் கொண்டிருந்தான். பள்ளியில் படிப்பவள், கல்லூரி மாணவி, வங்கியில் வேலை செய்பவள், விநாயகர் கோயிலுக்கு வருபவள் என, ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொரு வரலாறு. உளவியல் மருத்துவராக இருக்கும் நண்பர் ஒருவரிடம் சண்முக சுந்தரத்தைப் பற்றிச் சொன்னேன். அதற்கு அவர் "உங்க நண்பர் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவர். பெண்களோட சகஜமா பேசற சூழல் அவருக்குக் கிடைக்கல. அதனால மாநகரத்தில் ஏதாவது ஒரு பெண் அவரிடம் பேசினாலே, காதலில் விழுந்து விடுகிறார். ஆணுக்கும் பெண்ணுக்கும் நடுவே எழுப்பப்பட்டிருக்கும் நூற்றாண்டுகளின் சுவர்தான் இதற்குக் காரணம்'' என்றார். ''அவனை உங்க கிளினிக்குக்குக் கூட்டிட்டு வரவா? ஏதாவது பண்ண முடியுமா?" என்றேன். "ஐயய்யோ வேணாம்பா... எங்க கிளினிக்ல இரண்டு மூணு நர்ஸுங்க அழகா இருக்காங்க" என்றார் சிரித்துக் கொண்டே.

அதற்குப் பிறகு தேர்வு நெருங்கி விட்டதால் சண்முக சுந்தரத்தைப் பார்க்க முடியவில்லை. தேர்வுக்கு முந்தைய வாரம் அவனது அப்பா "அவசரம், உடனே வரவும்" என்று ஒரு தந்தி கொடுத்திருந்தார். விழுந்தடித்துக் கொண்டு ஊருக்குச் சென்றான். ஒரு வாரம் கழித்து தேர்வு நாளன்று சோகமாக வந்தான். "என்னடா தாஜ் மஹால் தனியா இருக்கு?" என்றேன். "மோசம் போயிட்டேன்டா. ஊருக்குப் போனா எங்கம்மா விஷம் குடிச்சிடுவேன்னு வற்புறுத்தி, எங்க மாமா பொண்ணை எனக்குக் கல்யாணம் பண்ணி வைச்சிட்டாங்க" என்றான். அழுதுவிடுவான் போலிருந்தது. "வாழ்க்கைன்னா இப்படித்தான் இருக்கும்" என்று நான் என்னுடைய அதிமேதாவித்தனத்தை அறிவுரையாக மாற்றி, அவனுக்குள் ஊற்றிக் கொண்டிருந்தேன். தேர்வு முடிந்து திசைக்கொருவராய்ப் பிரிந்து சென்றோம்.

**வ**ருடங்கள் கடந்து, சென்ற வாரம் தி.நகர் ரங்கநாதன் தெருவில் சண்முகசுந்தரத்தைப் பார்த்தேன். உடம்பெங்கும் ஊதிப் போய் ஆளே அடையாளம் தெரியவில்லை. அதே பழைய ஸ்டெப்கட்டிங்தான் அவனை இனம் காண உதவியது. கையைப் பிடித்துக் கொண்டு ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தான். கடந்த காலத்தின் மூடுபனியை விலக்கி, எங்கள் கல்லூரி நாட்களை மீட்டுருவாக்கம் செய்து கொண்டிருந்தோம். பேச்சின் ஊடாக ஒரு சந்தோஷ தருணத்தில் "உன் நாப்பது லவ்வு என்னாச்சுடா?" என்றேன். வார்த்தைகளை மௌனத்தில் புதைத்துவிட்டு, நடைபாதைக் கடைகளை வெறித்துக் கொண்டிருந்தான். 'ஏன்டா கேட்டோம்' என்றாகிவிட்டது. ஒரு வழியாக உரையாடலை வேறு திசைக்கு மாற்றிக் கிளம்பும்போது, "மச்சான், ஒரு இருநூறு ரூபா இருக்குமா? குழந்தைக்கு பால் டப்பா வாங்கணும்'' என்றான். நான் பர்சைப் பிரித்தேன். மாநகரத்து அழகான பெண்கள், நெரிசலில் சண்முகசுந்தரத்தைத் தள்ளிவிட்டபடி ஜவுளிக் கடைகளை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

( மீண்டும் சந்திப்பேன்)

படம் : ஸ்ரீஹரி

''வீடு வசதியாத்தான் இருக்கு. வாடகையும் நியாயமாத்தான் இருக்கு. ஆனா அந்த வீட்டுக்காரர் நான்கடி, ஐந்தடி, ஆறடின்னு ஏதோ அளவுகள் சொன்னாரே, என்னது...?''

''வயக்காட்டிலே வீடு கட்டியிருக்காருல்ல... அப்பப்போ, அந்த அளவுள்ள பாம்புகள் தென் படும்னு சொல்றார்...!''

-கேஎன். பாலகிருஷ்ணன்



# குக்கர் எங்கே போச்சு?



''கவலைப்படுறாப் போல எதுவுமில்லையே டாக்டர்?''

''பீஸ் கட்டப் பணம் குறையுதுன்னு சொல்றீங்களே! கவலைப் படாம இருக்க முடியுங்களா?''

- பர்வதவர்த்தினி

''டி.வி பார்க்கும் போது கூட கவனமா இருந்து தொலைக்க வேண்டியிருக்கு.''

''என்னடி சொல்ற?''

''கண்ணீர் சரியா வடிக்கலேன்னா சீரியலுக்கு அழுவுற லட்சணத்தைப் பாருன்னு மாமியார் ஏசுறா!''

- பி.ஜி.பி. இசக்கி





''உங்க வீட்டில் 'குக்கர்' இல்லையா?''

''என் நாத்தனாருக்கு உடம்பு சரியில்லைனு பார்க்கப் போயிருக்கிறார்டி!''

- எம். அசோக்ராஜா

# குறையொன்றுமில்லை

ஞான - வைராக்யம் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன்.

மின்னல் மின்னுகிறது ஒரு க்ஷணத் துக்கு... அதுகூட இல்லை இந்தப் பிரபஞ்சம் - அந்த மின்னலின் நிலையற்ற தன்மையைக் காட்டிலும் நிலையற்றது இப் பிரபஞ்சம். இதிலே இருக்கிற நாம் மட்டும் அவ்வளவு சாச்வதமா?... இல்லை என்பதை உணர்ந்து, நீர் உமது என்றிவை வேர் முதல் மாய்த்து...' அதாவது 'நாம், நமது' என்கிற அஞ்ஞா னத்தை அடியோடு அறுத்தெறிந்து அகங் கார மமகாரங்களை அறுத்தெறிந்து அவன் திருவடியைப் பற்ற வேண்டும். இந்த வைராக்கியத்தைத்தான் வைராக்கியம் என்று சொல்லியிருக்கிறதேயொழிய, எல் லாம் முடிந்த பிறகு வாழ்க்கையிலே வெறுப்பு வந்தால், அதற்குப் பெயர் வைராக்கியம் அல்ல!

இரண்டுமாக பரமாத்மா இருக்கிறான் என்று சொன்னது இந்த ஞான - வைராக்கி யங்களைக் குறித்துத்தான்.

மூன்றாகவும் அவனே இருக்கிறான் அல்லவா...? அந்த மூன்று என்ன...? பரபக்தி பர ஞானம் - பரம பக்தி.

வைராக்கியம் சித்தித்தால்தான் பகவானி டத்தில் பரம பக்தி ஏற்படும். அவனை வஞ்சிக்கிற மாதிரி பக்தி இருந்து நமக்குப் பயனில்லை. ஒரு காரியம் ஆக வேண்டுமா னால் பத்து நாட்கள் பூஜை பண்ணுவது. அது முடிந்த பிறகு அவனை லட்சியமே பண்ணுவதில்லை!

'ஓஹோ, இவன் காரியார்த்தி!' என்று பகவான் முடிவுக்கு வருகிறான். ஆனாலும், 'இவன் இன்ன காரணத்துக்காக நம்மை வழி படுகிறான்' என்று உணர்ந்து பரமாத்மா அதற்குண்டான பலனைக் கொடுக்கிறான். பலனைக் கொடுக்காமல் அவன் இருப்ப தில்லை.

ஆனால் நாம் அந்த மாதிரி ஒரு கார ணத்துக்காகவா பக்தி பண்ணுவது! நிரந்தரமான பக்தி நமக்கு இருக்க வேண்டும் பகவானிடத்திலே. அந்த பக்தி, பிரஹலா தனுக்கு இருந்தது பாருங்கள்... அந்த மாதிரி திரட



■ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் ■

மான பக்தியாக இருத்தல் வேண்டும்.

பகவானைக் குறித்த சிறந்த ஞானம் நமக்கு வேண்டும். அவன் என்னென்ன பண்ணுவான், யார் யாருக்குப் பண்ணி யிருக்கிறான் என்பதையெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டு, அதைச் சொல்ல வேண்டும் அவனிடம்.



அவனிடத்திலே போய் நாம் அதைக் கொடு, இதைக் கொடு என்று கேட்கவே கூடாது.

பரஞானம் என்றால் என்ன...? 'அதைக் கொடு, இதைக் கொடு' என்று கேட்பதல்ல பரஞானம். பரஞானம் என்றால், அவன் எதிரிலே போய் உட்கார்ந்து கொண்டு, நீ கஜேந்திரனுக்காக இப்படி ஓடி வந்தாயே, அம்பரீஷனுக்குச் சக்கரத்தை முன்னமே கொடுத்தாயே! திரௌபதியை உன் திருநாமமே ரக்ஷித்ததே! நீ குருக்ஷேத்திர பூமியில் அப்பேர்ப்பட்ட பாரத்தையும் குறைத்தாயே! ராமனாய்ப் பிறந்து, இவ்வளவு காரியம் பண்ணினாயே! சரணாகதி பண்ணியவர்களை ரக்ஷித்தாயே!

- இப்படியே 'அதைப் பண்ணினாயே, இதைப் பண்ணினாயே!' என்று அவன் கதை மொத்தமும் அவன் முன்னே போய் நாம் சொல்ல வேண்டும். இப்படியே நாம் சொல்லிக் கொண்டிருந்தோமானால் பகவான் பார்ப்பான்... 'நம்ம சமாசாரம் மொத்தத்தையும் இவன் தெரிந்து வைத்திருக்கிறான் போலிருக்கிறது. இவனை நாம் ஏமாற்ற முடியாது' என்று முடிவுக்கு வந்து, என்ன வேண்டுகிறோமோ, அதை நாம் கேளாமலே கொடுத்து விடுவான்!

உலக வாழ்க்கையிலேயும் இது சகஜம் தானே?... 'நீ என்னத்துக்காக எகிறி குதிக்கிறாய்? நீ யார் என்று எனக்குத் தெரியாதா...? உன் அப்பா யார் என்று எனக்குத் தெரியாதா...? உங்கள் வம்சத்திலே எப்படிப் பட்டவர்களெல்லாம் உண்டு என்று எனக்குத் தெரியாதா...? இன்றைக்கு என்னவோ புதுசாகப் பேசுகிறாயே நீ!'' என்று ஒருத்தரிடம் நாம் பேசினால்,

''சுவாமி, வாயை மூடிக் கொண்டு விடுமே! நீர் கேட்பதை நான் இதோ கொடுத்து விடுகிறேன். வாங்கிக் கொண்டு போய்விடுமே!'' என்று அவர் நாம் விரும்புவதைத் தந்துவிடுவார்.

அதனால், பகவானே பக்தர்களிடத்திலே பயப்படுகிறான். நீ அதைப் பண்ணினாயே, இதைப் பண்ணினாயே, அவ்வளவு விலை நான் தானமாட்டேனா?' என்று கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுகிறான்!

இதை அடியேன் சொல்லவில்லை. சுவாமி தேசிகனே பரமார்த்த ஸ்துதியிலே சொல்கிறார் இதை.

"ஹே ப்ரபோ! நீ சரணாகத ரக்ஷண விரதம் உடையவன். உன் திருவடியைப் பற்றியவர்களைக் கைவிட மாட்டாய். நீ என்ன சொல்லியிருக்கிறாய்...? அன்றைய தினம் விபீஷணனையே சேர்த்துக் கொள்ளக் கூடாது என்றார்கள் எல்லோரும். அப்போது நீ என்ன சொன்னாய்...? விபீஷணனுக்குத் தடை சொல்கிறாயே அடா சுக்ரீவா! ராவணனே வந்திருந்தாலும் போய் அழைத்துக் கொண்டு வா..' என்று சொன்னாய். நனைந்த கை உலருகிற சமயத்தில், உன் பத்னியை அபகரித்த மகாபாபி அவன். அப்படிப்பட்டவனுக்கே அபயம் அளிக்கிறேன் என்று சொன்னாய் நீ. அப்படிப்பட்ட நீ... அந்த மாதிரி தப்புகள் எதுவும் நான் பண்ணியிருக்கிறேனா, இல்லையே! ஒரு தப்பும் பண்ணாத என்னை உன்னாலே கைவிட முடியுமா!'' என்று கேட்கிறார்.

"சொன்னவன் நீ தான், உன் வாக்குதான் பிரமாணம். ஒரு தப்பும் பண்ணாத என்னை விட முடியுமா உன்னாலே! ராவணனுக்கே அபயம் அளிக்கிறேன் என்று சொன்னவன், என்னைவிட முடியுமா?'' என்று சுவாமி தேசிகன் கேட்கிறார்.

**அ**ந்த மாதிரி பகவானிடத்திலே கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுவான் அவன்.

பிள்ளை பெருமாள் அய்யங்காரும் இப்படியேதான் பகவானைப் பார்த்துக் கேட்டார். அர்ச்சனை பண்ணிக் கொண்டேயிருந்தார் ரங்கநாதருக்கு... கிருஷ்ணாவதார மகிமைகளைச் சொல்லி அர்ச்சனை :

---

''என்னய்யா ஆபீசுக்கு மேல் சட்டை போடாம முண்டா பனியனோட வந்திருக்க...?''

''சட்டை போட்டா தீபாவளிக்கு என் மாமனார் கொடுத்த அஞ்சு பவுன் தங்கச் சங்கிலியை மறைக்கும் சார்.

_ குருலை சோலோ செல்வாஸ்



நவநீத சோராய நம :
ததிபாண்ட மோக்ஷ தாயினே நம :
என்றார்.. சொல்லிக் கொண்டே வந்ததும் இந்த இடத்திலே நிறுத்தி, தட்டைக் கீழே வைத்துவிட்டார்.
தட்டைக் கீழே வைத்துவிட்டு, ரங்க நாதரைப் பார்த்துக் கேட்கிறார்.
"ரங்கநாதா! மோக்ஷம் கொடு!" என்கிறார்.
"இன்றைக்கே போக வேண்டும்" என்கிறார். மோக்ஷத்துக்கு!
ரங்கநாதர் பிள்ளை பெருமாள் அய்யங் காரைப் பார்த்துக் கேட்கிறார் :
"நீர் என்ன கர்மயோகம் பண்ணினீரா?"
"அதெல்லாம் எனக்குத் தெரியாது!" என்கிறார் அய்யங்கார்.
"ஞான யோகம்...?"
"அதிலே அறவே ஞான சூன்யம்."
"பக்தி யோகம்...?"
"தெரியாதே!"
"பிரபத்தி, சரணாகதி...?"
"தெரியாதே!"
"என் கதை சொல்கிற இடத்திலே போய்க் கேட்டதுண்டா?"
"இல்லையே!"
"என் பக்தர்களுக்கு ஒரு நாளாவது உமது கிருஹத்திலே இடம் கொடுத்ததுண்டா...? தங்குவதற்கு இடமளித்ததுண்டா?"
"இல்லையே!"
"என் பக்தனுக்கு அன்னமிட் டதுண்டா?"
"இல்லையே!"
இப்படி எதைக் கேட்டாலும் 'இல்லையே' என்கிறார்.
"புண்ணிய நதிகளில் நீராடியது உண்டா?.."
"இல்லையே!"
"திவ்ய தேச யாத்திரை பண்ணியது உண்டா...?"
"இல்லையே!"
இப்படியே எதைக் கேட்டாலும் பிள்ளை பெருமாள் அய்யங்கார் 'இல் லையே! இல்லையே!' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.
படுத்துக் கொண்டிருக்கிற ரங்கநாதருக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது! எழுந்து உட்கார்ந்து கொண்டுவிட்டார்!
நாமெல்லாம் ரங்கநாதர் படுத்துக் கொண்டிருக்கிற ஸேவையைத்தான் பார்த்திருக்கிறோம். பிள்ளை பெருமாள்



"டைவர்ஸ் இல்லாமலே நீங்க உங்க கணவரைப் பிரிஞ்சிட்டீங்களே...?"
"மேரேஜ் பண்ணிக்காமலே கணவன் மனைவியா வாழ்ந்தது வசதியாப் போச்சு!"
- சீர்காழி விரேவதி

அய்யங்கார் ரங்கநாதர் அமர்ந்த ஸேவை யைப் பார்த்தார்!
எழுந்து உட்கார்ந்து கொண்ட ரங்க நாதர், "என்ன அக்கிரமம்! நீர் என்ன மோக்ஷம் கிள்ளுக்கீரைன்னு நினைத்துக் கொண்டிருக்கிறீரா...? நான் கேட்டதில் ஏதாவது ஒன்றேனும் பண்ணியிருக்கிறீர் என்று சொன்னால், உமக்கு மோக்ஷம் கொடுக்கலாம். ஒன்றுமே பண்ணாத உமக்கு எவ்வாறு நான் மோக்ஷம் கொடுப்பேன்?"
உடனே இவருக்குக் கோபம் வந்து விட்டது. இடுப்பு வஸ்திரத்தை இறுக்கிக் கட்டினார்.
"ரங்கநாதா! நான் உன்னை ஒன்று கேட்கிறேன்... இதையெல்லாம் பார்த்துத் தான் நீ மோக்ஷம் கொடுக்கிறாயா? என்னைப் பார்த்து நீ வரிசையாக, அடுக்கடுக்காகக் கேள்வி கேட்கிறாயே...? 'கர்ம யோகம் பண்ணினாயா? ஞான யோகம் பண்ணினாயா? பக்தி யோகம் பண்ணினாயா? பிரபத்தி பண்ணினாயா? அதைப் பண்ணினாயா? இதைப் பண்ணி னாயா? என்று இப்படி அடுக்கடுக்காகக் கேட்கிறாயே! அன்றைய தினம் ததி பாண்டன் வீட்டுப் பானை இவற்றிலே எதைப் பண்ணிற்று...? வந்திக்க மனமில்லை, விழுந்தெழுந்து கைகூப்ப கரமில்லை, சேவிக்க மெய்யில்லை. எதுவொன்றும் இல்லாத பானைக்கு எப்படி மோக்ஷம் கொடுத்தாய்?" என்று ரங்கநாதரைப் பார்த்து அதட்டிக் கேட்கிறார் பிள்ளை பெருமாள் அய்யங்கார்!

(வளரும்)



# ஜொல்லு மல்லு

— கதிர்



ஏய்... என்ன உடம்பெல்லாம் ஒரே கட்டு...?
தீபாவளி ஃபேஷன் ஷோவிலே வித்தியாசமா இருக்கட்டுமேன்னு உடம்பெல்லாம் பட்டாசு கட்டிக்கிட்டு நடந்ததால வந்த வினை!




ஏன்... பேஷன் ஷோவ இந்தியா பார்டர்ல நடத்தினீங்களா?
நிறுத்துடா... எனக்கு மேல் மாடலா பக்கத்துலே வந்தவன் ஸ்டைலுக்காக கையிலே ஊதுவத்தி வைச்சிருந்தான். லைட்டா பட்டு ஃபயர் ஆயிடுச்சு!




அப்போ உன் முகத்துல இருக்கிற பிளாஸ்திரி குறியை எல்லாம் கூட்டிக் கழிச்சிப் பெருக்கிப் பாக்கும்போது...




பாக்கும்போது...?






பட்டாசு ரொம்ப நல்ல பிராண்டுன்னு சொல்ல வந்தேன்.
உன் சுடிக்கு பட்டாசு சூடு பெட்டர்!




எப்படி இருந்த நான் இப்படியாயிட்டேன்!

